ஸ்ரீ ஸத்குருப்யோ நம:

கிஷைக்கோத்து.] [௫-ம் புத்தகம்.]

ஸ்ரீ வியாஸபகவான் அருளிச்செய்த

# குருகீதை

இது

தஞ்சைமாநகரம்

ஸ்ரீ. வெ. குப்புஸ்வாமிராஜு அவர்களால்

செய்யப்பட்ட

தமிழ்மொழிபெயர்ப்புடன்

தஞ்சை

வி. கோவிந்தன் அண்டு பிரதர்ஸ் அவர்களால்

தமது

ஸ்ரீ வித்தியாவிநோதினீமுத்திராசாலையில்

பதிப்பிக்கப்பெற்றது.

இதன் விலை.] [அணா ௬.

1910.

௳

ஸ்ரீ ஸத்குருப்யோ நம:

# முகவுரை.



புராணேதிகாசமுதலியவற்றில் உபதேசவடிவமாயுள்ள பல கீதைகளடங்கிய பல புத்தகரூபமாய் வெளிப்படும் கீதைக்கொத்தின் மூன்றாம்புத்தகமாகிய குருகீதை ஸ்ரீ ஸ்காந்தபுராணத்தின் உத்தரகண்டத்தில் உமாமகேசுவரசம்வாதரூபமாய் ௩௫௪ சுலோகங்களடங்கிய மூன்றுஅத்தியாயவடிவினது. "आचार्यवान्पुरुषो वेद ஆசாரியனையுடைய புருஷன் அறிவன். (சத்துவடிவ ஆத்மாவை அறிதற்கு இதைவிட வேறு உபாயமில்லை.)" என்று சாந்தோக்கியம், "यस्य देवे परा भक्तिर्यथा देवे तथा गुरौ तस्यैते कथिता ह्यर्थाः प्रकाशन्ते महात्मन : ॥ எவனுக்கு ஈசுவரனிடத்து மேலானபக்தியிருக்கின்றதோ, ஈசுவரனிடத்திற்போல குருவினிடத்துமிருக்கின்றதோ, அந்த மகாத்மாவுக்கே சொல்லப்பட்ட இவ்வர்த்தங்கள் பிரகாசிக்கும்." என்னும் சுவேதாசுவதரவுபநிஷத * முதலிய பிரமாணங்களாலும் லோகாநுபவத்தாலும் குருவின்றி யெவ்விதத்தாலும் ஆத்மஞானமும் மற்றெவ்வகைஞானமும் உதியாதென்பது பிரசித்தம். ஆகவே இக்குருகீதையானது குருவின லக்ஷணம், அவர்பெருமை, அவரையுபாசிக்குமுறைகள்முதலியவற்றை அறிவிக்கும் வாயிலாக ஜீவர்களுக்குக்

குருபக்தி செவ்வையா யுண்டாகுமாறு எடுத்துக்கூறுகின் றது. அதுபற்றி ஆஸ்திகர்கள் ஒவ்வொருவரும் இக்குரு கீதையினை தினந்தோறும் படனஞ்செய்துவரவேண்டியது. இதனைப் படனஞ்செய்யும் முறை, அதனால் உண்டாகும் பயன் முதலியன இந்நூலின்கண்ணேயே செவ்வையாய் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் இது சம்ஸ்கிருதத் திலிருத்தலால் தமிழ்நாட்டாருக்குப் பிரயோஜனப்படாமை கருதி அவர்களுக்கு உபயோகமாமாறு தஞ்சை ஸ்ரீமான் வே. குப்புஸ்வாமிராஜு அவர்களால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டது. இதனை இப்போது எம்மிடத்திலுள்ள னவும், தஞ்சை மகாராஜா அரண்மனை சரசுவதிமாஹலுள்ள னவும், தெலுங்கு நாகரி அச்சுப்பிரதிகளுமாகிய பல பிரதி களைக்கொண்டு பலவித்வான்கள் முன்னிலையில் சோதித்து தேவநாகர எழுத்திலும் கிரந்த எழுத்திலுமாக மூலசுலோ கங்களும் அவற்றிற்கு நேரான தமிழ் மொழிபெயர்ப்பும் அதன் பிரதிபதானுவர்த்தகங்களுடன் சேர்த்து வெளியிடலாயின. இதில் ஏற்படும் எழுத்துக்குற்றமுதலியவற்றைப் பெரி யோர் பொறுப்பாராக.

வெ. வீராசாமிராஜு,
வி. கோவிந்தன் & பிரதர்ஸ்,
தஞ்சாவூர்.



ஸ்ரீ-தக்ஷிணாமூர்த்தி.

வி. ஜி. அண்டு பிரதர்ஸ், தஞ்சாவூர்.

ॐ

॥ श्रीगणेशशारदासद्गुरुमंगलमूर्त्तिभ्यो नमः ॥

यं ब्रह्म वेदांतविदो वदंति परं प्रधानं पुरुषं तथान्ये ॥
विश्वोद्गतेः कारणमीश्वरं वा तस्मै नमो विघ्ननिवारणाय ॥ १ ॥

ॐ अस्य श्रीगुरुगीतामालामंत्रस्य भगवान् सदाशिव ऋषिः ।
विराट् छंदः ॥ श्रीगुरुपरमात्मा देवता ॥ हं बीजं ॥ सः शक्तिः ॥
सोहं कीलकं ॥ श्रीगुरुकृपाप्रसादसिद्ध्यर्थे जपे विनियोगः ॥

अथ करन्यासः ॥

ओं हं सां सूर्यात्मने अंगुष्ठाभ्यां नमः ॥
ओं हं सीं सोमात्मने तर्जनीभ्यां नमः ॥
ओं हं सूं निरंजनात्मने मध्यमाभ्यां नमः ॥
ओं हं सैं निराभासात्मने अनामिकाभ्यां नमः ॥
ओं हं सौं अतनुसूक्ष्मात्मने कनिष्ठिकाभ्यां नमः ॥
ओं हं सः अव्यक्तात्मने करतलकरपृष्ठाभ्यां नमः ॥

॥ इति करन्यासः ॥

अथ हृदयादिन्यासः ॥

ओं हं सां सूर्यात्मने हृदयाय नमः ॥
ओं हं सीं सोमात्मने शिरसे स्वाहा ॥

ओं हं सूं निरंजनात्मने शिखायै वषट् ॥
ओं हं सैं निराभासात्मने कवचाय हुं ॥
ओं हं सौं अतनुसूक्ष्मात्मने नेत्रत्रयाय वौषट् ॥
ओं हं सः अव्यक्तात्मने अस्त्राय फट् ॥

॥ इति हृदयादि न्यासः ॥

अथ ध्यानम् ॥

हंसाभ्यां परिवृत्तपत्रकमलैर्दिव्यैर्जगत्कारणं
विश्वोत्कीर्णमनेकदेहनिलयं स्वच्छन्दमानन्दकम् ।
आद्यंतैकमखंडचिद्घनरसं पूर्णं ह्यनंतं शुभं
प्रत्यक्षाक्षरविग्रहं गुरुपदं ध्यायेद्विभुं शाश्वतम् ॥ १ ॥
विश्वं व्यापिनमादिदेवममलं नित्यं परं निष्कलं
नित्योद्बुद्धसहस्रपत्रकमले लुप्ताक्षरे मंटपे ।
नित्यानंदमयं सुखैकनिलयं नित्यं शिवं स्वप्रभं
ध्यायेद्धंसपरं परात्परतरं स्वच्छंदसर्वागमम् ॥ २ ॥
ऊर्ध्वाम्नायगुरोः पदं त्रिभुवनाकाराख्यसिंहासनं
सिद्धाचारसमस्तवेदपठितं षट्चक्रसंचारिणं ।

अद्वैतस्फुरदग्निमेकममलं पूर्णप्रभाशोभितं
शांतं श्रीगुरुपंकजं भज मनश्चैतन्यचंद्रोदयम् ॥ ३ ॥
नमामि सद्गुरुं शांतं प्रत्यक्षं शिवरूपिणम् ।
शिरसा योगपीठस्थं मुक्तिकामार्थसिद्धिदम् ॥ ४ ॥
प्रातः शिरसि शुक्लाब्जो द्विनेत्रं द्विभुजं गुरुं ।
वराभयकरं शांतं स्मरेत्तन्नामपूर्वकम् ॥ ५ ॥
प्रसन्नवदनाक्षं च सर्वदेवस्वरूपिणम् ।
तत्पादोदकजा धारा नियतंती स्वमूर्द्धनि ॥ ६ ॥
तया संक्षालयेद्देहे ह्यंतर्बाह्यगतं मलं ।
तत्क्षणाद्विरजो भूत्वा जायते स्फटिकोपमः ॥ ७ ॥
तीर्थानि दक्षिणे पादे वेदास्तन्मुखमाश्रिताः ।
पूजयेदर्चितं तं तु तदभिध्यानपूर्वकम् ॥ ८ ॥
सहस्रदलपंकजे सकलशीतरश्मिप्रभं
वराभयकरांबुजं विमलगंधपुष्पांबरम् ।
प्रसन्नवदनेक्षणं सकलदेवतारूपिणम्
स्मरेच्छिरसि हंसगं तदभिधानपूर्वं गुरुम् ॥ ९ ॥

॥ इतिध्यानम् ॥

॥ मानसोपचारैः श्रीगुरुं पूजयित्वा ॥

लं पृथिव्यात्मने गंधतन्मात्राप्रकृत्यानंदात्मने श्रीगुरुदेवाय नमः पृथिव्यात्मकं गंधं समर्पयामि ॥

हं आकाशात्मने शब्दतन्मात्राप्रकृत्यानंदात्मने श्रीगुरुदेवाय नमः आकाशात्मकं पुष्पं समर्पयामि ॥

यं वाय्वात्मने स्पर्शतन्मात्राप्रकृत्यानंदात्मने श्रीगुरुदेवाय नमः वाय्वात्मकं धूपं समर्पयामि ॥

रं तेजआत्मने रूपतन्मात्राप्रकृत्यानंदात्मने श्रीगुरुदेवाय नमः तेजआत्मकं दीपं समर्पयामि ॥

वं अबात्मने रसतन्मात्राप्रकृत्यानंदात्मने श्रीगुरुदेवाय नमः अबात्मकं नैवेद्यं समर्पयामि ॥

सं सर्वात्मने सर्वतन्मात्राप्रकृत्यानंदात्मने श्रीगुरुदेवाय नमः सर्वात्मकान् सर्वोपचारान् समर्पयामि ॥

॥ इति मानसपूजा ॥

अथ श्रीगुरुमालामंत्रः ॥

ओं नमः श्रीगुरुदेवाय परमपुरुषाय सर्वदेवतावशीकराय सर्वारिष्टविनाशनाय सर्वमंत्रच्छेदनाय त्रैलोक्यं वशमानय स्वाहा ॥

———

ௐ

ஸ்ரீகணேசாய நம:

# ॥ श्रीगुरुगीता ॥

# ஸ்ரீ குருகீதை.



## முதல் அத்தியாயம்.

### மங்கலம்.

अचिंत्याव्यक्तरूपाय निर्गुणाय गुणात्मने ।
समस्तजगदाधारमूर्त्तये ब्रह्मणे नमः ॥ १ ॥

சிந்தித்தற்கரிய * க. அவ்வியக்தவடிவினதும், நிர்க்குணமும், குணசொரூபமும், சகலஜகத்திற்கும், ஆதாரவடிவமுமாகிய பிரஹ்மத்திற்கு நமஸ்காரம். (க)

॥ ऋषय ऊचुः ॥

गुह्याद्गुह्यतमं सारं गुरुगीता विशेषतः ।
त्वत्प्रसादाच्च श्रोतव्या तत्सर्वं ब्रूहि सूत नः ॥ २ ॥

---

* க. வெளிப்படுதலில்லாத வடிவினையுடையது அதாவது இந்திரியமுதலியவற்றிற்கு விஷயமாகாதது.

ருஷிகள் சொல்லலாயினர்:—இரகசியத்தினும் மிக்க இரகசியமும் சாரமுமான குருகிதை விசேஷமாகத் தமது பிரசாதத்தாற் கேட்கத்தக்கதாம். ஆதலாற் சூதமுனிவரே! அவ்வெல்லாவற்றையும் அடியேங்களுக்கு அநுக்கிரகித்தல் வேண்டும். (௨)

॥ सूत उवाच ॥

कैलासशिखरे रम्ये भक्तिसाधनहेतवे ।
प्रणम्य पार्वती भक्त्या शंकरं परिपृच्छति ॥ ३ ॥

சூதர் சொல்லலாயினர்:—அழகிய கைலாசசிகரத்தில் பக்திக்குச் சாதனமாதல் காரணமாகப் பார்வதிதேவியார் ஸ்ரீசங்கரரைப் பக்தியோடு நமஸ்கரித்துக் கேட்கலாயினர். (௩)

॥ पार्वत्युवाच ॥

ओं नमो देव देवेश परात्पर जगद्गुरो ।
सदाशिव महादेव गुरुदीक्षां प्रयच्छ मे ॥ ४ ॥

பார்வதியார் கேட்கலாயினர்:—* உ. பிரணவசொரு

---

* உ. பிரணவசொரூபி யென்பதனை மாண்டூக்கியாதி சுருதிகளிலும் விசாரசாகரத்திலும் காண்க.

பியாகிய தேவனே! தேவேசனே! *ங. பராற்பரனே! உலக குருவே! சதாசிவனே! மகாதேவனே! (தமக்கு) நமஸ்காரம். குருதீக்ஷையை யெனக் கருளல்வேண்டும். (ச)

भगवन् सर्वधर्मज्ञ व्रतानां व्रतनायकम् ।
ब्रूहि मे कृपया शंभो गुरुमाहात्म्यमुत्तमम् ॥ ५ ॥

*ச. பகவானே! சர்வதர்மங்களு முணர்ந்தவரே! *ரு. சம்புவே! விரதங்களுக்கெல்லாம் விரதநாயகமும் உத்தமமுமான குருமான்மியத்தைக் கிருபையோ டெனக்கருள்வீராக. (ரு)

केन मार्गेण भो स्वामिन् देही ब्रह्ममयो भवेत् ।
तत्कृपां कुरु मे स्वामिन्नमामि चरणौ तव ॥ ६ ॥

ஓ சுவாமி! தேகியானவன் எவ்வழியினால் பிரஹ்மமயமாகின்றானோ, அதனை யெனக் கருள்செய்வீராக. தமது சரணங்களை நமஸ்கரிக்கின்றேன். (சா)

---

* ங. பரமாயுள்ள அவ்வியக்தமுதலியவற்றிற் கெல்லாம் பரமாயுள்ளவன் அதாவது மேலானவற்றிற்கும் மேலானவன்.

* ச. பகம் என்பது சர்வஞ்ஞத்துவாதி ஐசுவரியம்; அவற்றை யுடையவன் பகவான்.

* ரு. शम् சம்=சுகம்; அதற்கு भुः பு அதாவது இடமாயுள்ளவர்; சம்பு அதாவது சுகசொரூபி யென்பதாம்.

॥ श्रीमहादेव उवाच ॥

मम रूपासि देवि त्वं त्वद्भक्त्यर्थं वदाम्यहम् ।
लोकोपकारकः प्रश्नो न केनापि कृतः पुरा ॥ ७ ॥

ஸ்ரீ மகாதேவர் சொல்லலாயினர்:—தேவி! நீ யெனது வடிவமா யிருக்கின்றாய். லோகோபகாரமான கேள்வியினைக் கேட்டாய். இது முன்னொருவராலும் கேட்கப்பட்டதன்று. அதனை யான் நினது பக்தியின்பொருட்டுக் கூறுகின்றேன். (எ)

यस्य देवे परा भक्तिर्यथा देवे तथा गुरौ ।
तस्यैते कथिता ह्यर्थाः प्रकाशंते महात्मनः ॥ ८ ॥

எவனுக்குத் தெய்வத்தினிடத்து மேலான பக்தி யிருக்கின்றதோ, தெய்வத்தினிடத்திற் போலக் குருவினிடத்து மிருக்கின்றதோ, அந்த மகாத்மாவிற்கே சொல்லிய இவ்வர்த்தங்கள் பிரகாசிக்கும். (அ)

यो गुरुस्स शिवः प्रोक्तो यश्शिवः स गुरुस्स्मृतः ।
विकल्पं यस्तु कुर्वीत स नरो गुरुतल्पगः ॥ ९ ॥

குரு எவரோ அவர் சிவனெனப்படுகின்றார். சிவன் எவரோ அவர் குருவெனக் கருதப்படுகின்றார். (குரு வேறு சிவன் வேறு என்று) எவன் விகற்பத்தைச் செய்கின்று

னே, அந்தரன் குருவின் மனைவியைச் சேர்ந்தவனாகின்றான். (கூ).

दुर्लभं त्रिपु लोकेपु तच्छृणुष्व वदाम्यहम् ।
गुरुर्ब्रम्ह विना नान्यत् सत्यं सत्यं वरानने ॥ १० ॥

அழகிய முகத்தினையுடைய பார்வதி! மூன்றுலகங்களினும் அடைதற்கரியது யாதோ அதனைச் சொல்லுகின்றேன். கேள். குரு பிரஹ்மத்தைவிட அந்நிய மில்லை. இது சத்தியம் சத்தியம்.

वेदशास्त्रपुराणानि इतिहासादिकानि च ।
मंत्रयंत्रविद्यादीनि मोहनोच्चाटनादिकम् ॥ ११ ॥

शैवशाक्तागमादीनि ह्यन्ये च वहवो मताः ।
अपभ्रंशाः समस्तानां जीवानां भ्रांतचेतसाम् ॥ १२ ॥

வேதசாஸ்திரபுராணங்களும், இதிகாசமுதலியனவும் மந்திரயந்திரவித்தைமுதலியனவும், மோகனம் உச்சாடனமுதலியனவும், சைவசாக்தாகமங்கள் முதலியனவும், மற்றுமுள்ள அநேகம் (சாங்கியாதி) மதங்களும் (குருவுண்மை தெரியாத) மயக்க உள்ளத்தினைப் பெற்றுள்ள சகல ஜீவர்களுக்கும் தவறுடையனவேயாம். (கக-கஉ)

जपस्तपो व्रतं तीर्थं यज्ञो दानं तथैव च ।
गुरुतत्त्वमाविज्ञाय सर्वं व्यर्थं भवेत्प्रिये ॥ १३ ॥

பிரியமுள்ளவளே! குருவுண்மையை அறியாததினால் ஜபம், தவம், விரதம், தீர்த்தம், யாகம், அவ்வாறே தானம் என்பவை யாவும் வியர்த்தமாம். (கங)

गुरुबुद्ध्यात्मनो नान्यत् सत्यं सत्यं वरानने ।
तल्लाभार्थं प्रयत्नस्तु कर्तव्यश्च मनीषिभिः ॥ १४ ॥

பார்வதி! * க. குருஞானத்தினால் ஆத்மாவிற்கு வேறானதில்லை. இது சத்தியம்; சத்தியம். அதனைப் பெறுதற்பொருட்டுப் பிரயத்தினம் விவேகிகளால் செய்யத்தக்கதாம். (கச)

गूढाविद्या जगन्माया देहश्चाज्ञानसंभवः ।
विज्ञानं तत्प्रसादेन गुरुशब्देन कथ्यते ॥ १५ ॥

உலகமாயை * எ. கூடமான அவித்தையாம்; தேகம் அஞ்ஞானத்தாலாகியதாம் என்றும் * அ. விஞ்ஞானம் எவ

---

* க. குருவானருளும் ஞானத்தினால்.

* எ. கூடம் இரகசியம்.

* அ. விஞ்ஞானம் = விசேஷஞானம்.

ரது கிருபையா லுண்டாகின்றதோ, அவர் குரு வென் னுஞ்சொல்லாற் சொல்லப்படுகின்ருர். (கரு)

यदंघ्रिकमलद्वंद्वं द्वंद्वतापनिवारकम् ।
तारकं भवसिंधोश्च श्रीगुरुं प्रणमाम्यहम् ॥ १६ ॥

எவரது பாததாமரைக ளிரண்டும் துவந்துவ (சுகதுக் காதிஇருமைத்தாப)த்தை நீக்குவனவாயும், பவ(பிறவி)க் கடலைக் கடப்பிப்பனவாயு மிருக்கின்றனவோ அத்தன் மைய ஸ்ரீகுருவைப் பணிகின்றேன். (கசா)

देही ब्रह्म भवेद्यस्मात् त्वत्कृपार्थं वदामि तत् ।
सर्वपापविशुद्धात्मा श्रीगुरोः पादसेवनात् ॥ १७ ॥

எக்காரணத்தினல் ஸ்ரீகுருவின் பாதசேவையினல் தேகி சர்வபாபங்களினின்றும் * க. விசுத்தவடிவமாய்ப் பிரஹ்ம மாவனே, அதனை நினக்கருளாற் கூறுகின் றேன். (கஎ)

सर्वतीर्थावगाहस्य संप्राप्नोति फलं नरः ।
गुरोः पादोदकं पीत्वा शेषं शिरसि धारयन् ॥ १८ ॥

குருவின் பாதோதகத்தைப் பருகி மிஞ்சியதைச் சிரசிற் றெளித்துக்கொண்டு, அதனல் நரன் சகல தீர்த் தங்களிலும் மூழ்கியதன் பயனை யடைகின்ருன். (கஅ)

---

* க. விசுத்தம்=விசேஷ தூய்மை.

शोषणं पापपंकस्य दीपनं ज्ञानतेजसः ।
गुरोः पादोदकं सम्यक् संसारार्णवतारकम् ॥ १९ ॥

குருவின் பாதோதகம் செவ்வையாய்ப் பாபச்சேற்றை உலர்த்துவதும், ஞானதேஜஸை விளக்குவதும், சம்சாரசமுத்திரத்தைக் கடத்துவதுமாம். (கசு)

अज्ञानमूलहरणं जन्मकर्मनिवारणम् ।
ज्ञानवैराग्यसिद्ध्यर्थं गुरुपादोदकं पिबेत् ॥ २० ॥

அஞ்ஞானமாகிய மூலத்தைக் கெடுப்பதும், பிறப்பிற்கேதுவான கர்மத்தை யொழிப்பதுமாகிய குருபாதோதகத்தை ஞானவைராக்கியம் பெறுதற்பொருட்டுப் பருகுவாம். (உ௦)

गुरुपादोदकं पानं गुरोरुच्छिष्टभोजनम् ।
गुरुमूर्त्तेस्सदा ध्यानं गुरोर्नाम सदा जपः ॥ २१ ॥

குருவின் பாதோதகத்தைப் பருகலும், குருவின் உச்சிஷ்டத்தைப் புசித்தலும், குருவடிவை யெப்போதும் தியானித்தலும், குருவின் நாமத்தை யெப்போதும் ஜபித்தலும் செய்தல்வேண்டும். (உக)

स्वदेशिकस्यैव च नामकीर्त्तनं भवेदनंतस्य शिवस्य कीर्तनम्।
स्वदेशिकस्यैव च नामचिंतनं भवेदनंतस्य शिवस्य चिंतनम् ॥ २२ ॥

தன்தேசிகரது நாமத்தைக் கீர்த்தித்தல் *௧௦. அநந்தராகிய சிவனது கீர்த்தனமே யாகின்றது. தன் தேசிகரது நாமத்தைச் சிந்தித்தல் அநந்தராகிய சிவனது சிந்தனமே யாகின்றது. (௨௨)

यत्पादरेणुैव नित्यं कोपि संसारवारिधौ ।
सेतुवंधायते नाथं दैशिकं तमुपास्महे ॥ २३ ॥

எவருடைய பாத *௧௧ ரேணுவாகிய ஒன்று *௧௨. சம்சாரசமுத்திரத்திற் கணைபோலாகின்றதோ, அத்தேசிக நாதனை நித்தியம் உபாசிப்பாம். (௨௩)

यस्मादनुग्रहं लब्ध्वा महदज्ञानमुत्सृजेत् ।
तस्मै श्रीदेशिकेंद्राय नमश्चाभीष्टसिद्धये ॥ २४ ॥

---

* ௧௦. அநந்தம்=அந்தமில்லாமை. அந்தம்=பரிச்சேதம். அநந்தம், அபாரம், அபரிச்சின்னம் என்பன ஒருபொருட்சொற்கள், இதனை விரிவாய் அறியவிரும்புவோர் ஸ்ரீபாலபோதத்தின் முதல் உபதேசத்திற் காண்க.

* ௧௧. ரேணு=அணு; துகள்.

* ௧௨. விரிகின்ற ஜனனமரணம் சம்ஸார மெனப்படும்.

எவரநுக்கிரகத்தைப் பெற்று அதனல் * கங. மகத்தாகிய அஞ்ஞானம் நீக்கப்படுகின்றதோ, அந்த ஸ்ரீ தேசிகேந்திரருக்கு * கச. அபீஷ்டசித்தியின்பொருட்டு நமஸ்காரம். (உச)

काशीक्षेत्रं निवासश्च जान्हवी चरणोदकम् ।
गुरुर्विश्वेश्वरस्साक्षात् तारकं ब्रह्मनिश्चयः ॥ २५ ॥

குரவன் வசிக்குமிடம் காசிக்ஷேத்திரம். அவரது பாதோதகம் கங்கை. குருவானவர் சாக்ஷாத் விசுவேசுவரன். (அவர்வாக்கிலிருந்து வராநின்ற) பிரஹ்மநிச்சயம் * கரு. தாரகமாம். (உரு)

गुरोः पादांकितं यच्चु गयास्ते साक्षयो वटः ।
तीर्थराजः प्रयागोसौ गुरुमूर्त्यै नमो नमः ॥ २६ ॥

எந்த இடம் குருவின் பாதச்சுவடுபட்டுள்ளதோ அது கயை யாகின்றது. அது * கசு. அக்ஷயமான ஆல்; அது தீர்த்தங்களிற் சிறந்த பிரயாகையாம். அத்தன்மைய குருவடிவிற்கு நமஸ்காரம். (உசு)

* கங. மகத்து பெரிது.

* கச. அபீஷ்டசித்தி=விரும்பியதைப் பெறுதல்.

* கரு. தாரகம்=கடப்பிப்பது. அது பிரணவமந்திரத்திற் கோர்பெயர்.

* கசு. அக்ஷயம்—குறைவில்லாதது.

गुरुमूर्त्तिं स्मरेन्नित्यं गुरोर्नाम सदा जपेत् ।
गुरोराज्ञां प्रकुर्वीत गुरोरन्यन्न भावयेत् ॥ २७ ॥

குரவன்வடிவத்தைத் தினமும் ஸ்மரித்தல்வேண்டும். குரவன் நாமத்தை எப்போதும் ஜபித்தல்வேண்டும். குருவினுடைய ஆஜ்ஞையைச் செய்யவேண்டும். குரவனுக் கந்நியமானவற்றைப் பாவிக்கலாகாது. (உஎ)

गुरुवक्त्रे स्थितं ब्रह्म प्राप्यते तत्प्रसादतः ।
गुरोर्ध्यानं सदा कुर्यात् पुरुषं स्वैरिणी यथा ॥ २८ ॥

குருவின் முகத்தில் பிரஹ்ம மிருக்கின்றது. அது அவர தருளால் அடையப்படுகின்றது. * பரபுருஷனை வியபிசாரிஸ்திரீ நினைப்பதுபோல எப்போதும் குரவனைத் தியானித்தல்வேண்டும். (உஅ)

स्वाश्रमं च स्वजातिं च स्वकीर्तिं पुष्टिवर्धनम् ।
एतत्सर्वं परित्यज्य गुरोरन्यन्न भावयेत् ॥ २९ ॥

தனது (பிரஹ்மசாரியாதி) ஆசிரமம், தனது(பிராஹ்மணாதி) ஜாதி, தனது கீர்த்தி, † வளம் என்னு மிவ்வெல்லாவற்றையும் செவ்வையாய் விட்டுக் குரவனுக் கந்நியமானவற்றைப் பாவிக்கலாகாது. (குரவனையே தியானிக்கவேண்டுமென்பது பொருள்.) (உகூ)

अनन्याश्चिंतयंतो ये सुलभं परमं सुखम् ।
तस्मात्सर्वप्रयत्नेन गुरोराराधनं कुरु ॥ ३० ॥

குரவனை * க௭. அநந்நியமாய்ச் சிந்திப்பவர்க்குப் பரமாநந்தம் எளிதிற் பெறத்தக்கதாம். ஆதலால் எல்லா முயற்சியானும் குரவன் ஆராதனை செய்க. (௩௦)

गुरुवक्त्रे स्थिता विद्या गुरुभक्त्या च लभ्यते ।
त्रैलोक्ये स्फुटवक्तारो देवर्षिपितृमानवाः ॥ ३१ ॥

குரவன்வதனத்திலுள்ள வித்தை குரவனிடத்துச் செய்யும் பக்தியினு லடையப்படுகின்றது. மூன்றுலகத்தின் கண்ணுமுள்ள தேவரிஷிபிதுர்க்கள் மானிடரென்போர் இதனைத் தெளிவாய்க் கூறுவோராவர். (௩௧)

गुकारश्चांधकारो हि रुकारस्तेज उच्यते ।
अज्ञानग्रासकं ब्रह्म गुरुरेव न संशयः ॥ ३२ ॥

குகாரம் அந்தகாரமாம். ருகாரம் (அதனை விழுங்கும்) தேஜஸெனப்படுகின்றது. அஞ்ஞானத்தை விழுங்கும் பிரஹ்மம் குருவே; சம்சய மில்லை. (௩௨)

गुकारश्चांधकारस्तु रुकारस्तन्निरोधकृत् ।
अंधकारविनाशित्वाद्गुरुरित्यभिधीयते ॥ ३३ ॥

---

* க௭. அநந்நியம்=வேறில்லாதது.

குகாரம் இருளாம். ருகாரம் அதனைக் கெடுப்பதாம். அந்தகாரமாகிய இருளைக் கெடுப்பதா யிருத்தலால் குரு வெனப்படுகின்றது. (௩௩)

गुकारश्च गुणातीतो रूपातीतो रुकारकः ।
गुणरूपविहीनत्वाद्गुरुरित्यभिधीयते ॥ ३४ ॥

குகாரம் * கஅ. குணாதீதமாம். * ககூ. ரூபாதீதம் ருகாரமாம். குணரூபங்களி லில்லாததா யிருத்தலால் குரு வென்று கூறப்படுகின்றது. (௩௪)

गुकारः प्रथमो वर्णो मायादिगुणभासकः ।
रुकारोस्ति परं ब्रह्म मायाभ्रांतिविमोचकम् ॥ ३५ ॥

குகாரமாகிய முதலெழுத்து மாயாதிகுணங்களை விளக்குவதாம். ருகார மென்னும் இரண்டாவ தெழுத்து மாயா மயக்கத்தினைக் கெடுக்கும் பரப்பிரஹ்மமாம். (௩௫)

एवं गुरुपदं श्रेष्ठं देवानामपि दुर्लभम् ।
हाहाहूहूगणैश्चैव गंधर्वाद्यैश्च पूज्यते ॥ ३६ ॥

---

* கஅ. குணாதீதம்=சத்துவாதி குணங்களைக் கடந்தது.

* ககூ. ரூபாதீதம்=வெண்மைமுதலிய உருவங்களைக் கடந்தது.

இவ்விதத்தால் குருபதம் ஸ்ரேஷ்டமாம்; தேவர்களுக்கும் அடைதற்கரியதாம்; * ௨०. ஹாஹா ஹூஹூ வென்னும் கணங்களாகிய கந்தர்வர்முதலியோராலும் பூஜிக்கப்பட்டதாம். (௩௬)

ध्रुवं तेषां च सर्वेषां नास्ति तत्त्वं गुरोः परं ।
गुरोराराधनं कुर्यात् सजीवत्वं निवेदयेत् ॥ ३७ ॥

அவர்களெல்லோருக்கும் நிச்சயமாகக் குருவிற்கு மேலான * ௨௧ தத்துவ மில்லை. குருவின் ஆராதனஞ் செய்தல்வேண்டும். ஜீவத்தன்மையோடு (எல்லாவற்றையும்) நிவேதித்தல்வேண்டும். (௩௭)

आसनं शयनं वस्त्रं वाहनं भूषणादिकम् ।
साधकेन प्रदातव्यं गुरुसंतोषकारणम् ॥ ३८ ॥

சாதகன் குருவின் சந்தோஷகாரணமான ஆசனம்,படுக்கை, வஸ்திரம், வாகனம்,பூஷண முதலியவற்றைக் கொடுத்தல்வேண்டும். (௩௮)

---

* ௨०. ஹாஹா ஹூஹூ வென்போர் சிவனுக்கிருபுறத்திலும் ஹாஹா ஹூஹூ வென்று கோஷித்துக்கொண்டிருக்கும் கந்தருவர்கள்.

* ௨௧. தத்துவம்=உண்மை.

कर्मणा मनसा वाचा सर्वदाराधयेद्गुरुं ।
दीर्घदंडं नमस्कृत्य निर्लज्जो गुरुसन्निधौ ॥ ३९ ॥

குருவின் சந்நிதியில் நாணமின்றியவனுய்த் *உஉ. தீர்க்கதண்டமாக நமஸ்கரித்துக் கர்மத்தினுலும் மனதினுலும் வாக்கினுலும் குருவை எப்போதும் ஆராதித்தல் வேண்டும். (ஙகூ)

शरीरमिन्द्रियं प्राणमर्थस्वजनवांधवान् ।
आत्मदारादिकं सर्वं सद्गुरुभ्यो निवेदयेत् ॥ ४० ॥

சரீரத்தையும், இந்திரியத்தையும், பிராணனையும், பொருள் தம்மவர் பந்துக்கள் என்பவற்றையும், தன் தாரமுதலியவெல்லாவற்றையும் சற்குருவிற்கு நிவேதித்தல்வேண்டும். (சo)

गुरुरेको जगत्सर्वं ब्रह्मविष्णुशिवात्मकम् ।
गुरोः परतरं नास्ति तस्मात्संपूजयेद्गुरुं ॥ ४१ ॥

பிரஹ்மவிஷ்ணுசிவவடிவமாகிய குரவன் ஒருவரோ இச்சகமுழுவதும். குரவனைவிட மிக மேலான தத்துவமில்லை. ஆதலாற் குரவனைச் செவ்வையாய்ப் பூசித்தல்வேண்டும். (சக)

---

* உஉ. தீர்க்க=நீண்ட.

सर्वश्रुतिशिरोरत्नविराजितपदांबुजम् ।
वेदांतार्थप्रवक्तारं तस्मात्संपूजयेद्गुरुम् ॥ ४२ ॥

சகல வேதங்களின் சிரோரத்தினமாய் விளங்குகின்ற பாததாமரைகளை யுடையவராயும், வேதாந்தார்த்தங்களை யெடுத்து நன்றாய்ச் சொல்லுபவருமா யிருக்கின்ற குரவனைச் செவ்வையாய்ப் பூசித்தல்வேண்டும். (௪௨)

यस्य स्मरणमात्रेण ज्ञानमुत्पद्यते स्वयम् ।
स एव सर्वसंपत्तिः तस्मात्संपूजयेद्गुरुम् ॥ ४३ ॥

எவனை நினைத்தல்மாத்திரத்தால் ஞானம் தானே யுண்டாகுமோ, அவரே சகல சம்பத்துகளு மாவர். ஆதலாற் குரவனைச் செவ்வையாய்ப் பூசித்தல்வேண்டும். (௪௩)

कृमिकोटिभिराविष्टं दुर्गंधमलमूत्रकम् ।
श्लेष्मरक्तत्वचामांसैर्नद्धं चैतद्वरानने ॥ ४४ ॥

பார்வதி! இது(இவ்வுடல்) கிருமிகோடிகளால் சூழப்பட்டதும், துர்க்கந்தமுள்ள மலமூத்திரங்களுள்ளதும், சிலேட்டுமம் இரத்தம் தோல் மாம்ஸமுதலியவற்றால் கட்டப்பட்டதுமாம். (இதில் அபிமானத்தை விட்டுக் குருவைச் சரணாகதி யடையவேண்டு மென்பது பொருள். (௪௪)

संसारवृक्षमारूढाः पतंति नरकार्णवे ।
येनोद्धरतेदं विश्वं तस्मै श्रीगुरवे नमः॥ ४५ ॥

சம்ஸாரவிருக்ஷத்தில் ஏறியவர்கள் நரகமாகிய சமுத்திரத்தில் விழுகின்றார்கள். அவர்களெல்லோரையும் எவர் கரையேற்றுகின்றனரோ, அத்தன்மைய ஸ்ரீகுருவிற்கு நமஸ்காரம். (சரு)

गुरुर्ब्रह्मा गुरुर्विष्णुर्गुरुर्देवो महेश्वरः ।
गुरुरेव परं ब्रह्म तस्मै श्री.... ॥ ४६ ॥

குரவனே பிரஹ்மா; குரவனே விஷ்ணு; குரவனே மகேசுவரனாகிய தேவனும்; குரவனே ஏகமாகிய பரப்பிரஹ்மமாம். ஆதலால் அத்தன்மைய ஸ்ரீகுருவிற்கு நமஸ்காரம். (சசா)

अज्ञानतिमिरांधस्य ज्ञानांजनशलाकया ।
चक्षुरुन्मीलितं येन तस्मै श्री.... ॥ ४७ ॥

அஞ்ஞானமென்னும் திமிரத்தால் குருடாயுள்ளவனது கண், ஞானமென்னும் *உங. அஞ்சனசலாகையினால் எவரால் திறக்கப்பட்டதோ, அத்தன்மைய ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம். (சஎ)

* உங. கண்ணிற்கிடும் மையோடுகூடிய குச்சியினால்.

स्थावरं जंगमं व्याप्तं यत्किंचित्सचराचरम् ।
त्वंपदं दर्शितं येन तस्मै श्री.... ॥ ४८ ॥

ஸ்தாவரஜங்கமமான இச்சராசரம் எதனுல் வியாபிக்கப்பட்டிருக்கின்றதோ, அந்தத் துவம்பதம் * ௨௪. எவராற் காட்டப்பட்டதோ, அத்தன்மைய ஸ்ரீகுருவிற்கு நமஸ்காரம். (௪௮)

अखंडमडलाकारं व्याप्तं येन चराचरम् ।
तत्पदं दर्शितं येन तस्मै श्री.... ॥ ४९ ॥

அகண்டமண்டலாகாரமான சராசரம் எவரால் வியாபிக்கப்பட்டிருக்கின்றதோ, அந்தத் தத்பதம் * ௨௫. எவராற் காட்டப்பட்டதோ, அத்தன்மைய ஸ்ரீகுருவிற்கு நமஸ்காரம். (௪௯)

चिन्मयव्यापितं सर्वं त्रैलोक्यं सचराचरम् ।
असित्वं दर्शितं येन तस्मै श्री.... ॥ ५० ॥

சராசரத்தோடுகூடிய மூன்றுலகமும் யாவும் சின்

---

* ௨௪. தத்துவமஸிமகாவாக்கியத்துள்ள துவம் என்னும் சொல். துவம்=நீ.

* ௨௫. தத்துவமஸிமகாவாக்கியத்துள்ள தத் என்னும் சொல். தத்=அது.

மயத்தினுல் வியாபிக்கப்பட்டிருக்கின்றது. * ௨௬. அஸித்துவம் எவரால் காட்டப்பட்டதோ, அத்தன்மைய ஸ்ரீகுருவிற்கு நமஸ்காரம். (௫0)

निमिषार्द्धार्द्धपादाद्वा यद्वाक्याद्वै विलोक्यते ।
स्वात्मानं स्थिरमादत्ते तस्मै श्री.... ॥ ५१ ॥

எவரது வாக்கியத்தினுல் நிமிஷத்தினது பாதியின் பாதியில் அல்லது காற்பங்கில் (ஆத்மா) அறியப்படுகின்றதோ, தனது ஆத்மாவை (புருஷன்) ஸ்திரமாகத் தரிக்கின்றுனே அத்தன்மைய குருவை நமஸ்கரிக்கின்றேன். ()

चैतन्यं शाश्वतं शांतं व्योमातीतं निरंजनम् ।
नादविंदुकलातीतं तस्मै श्री.... ॥ ५२ ॥

சைதந்யமும், சாசுவதமும், சாந்தமும், ஆகாயத்திற்கப்பாற்பட்டதும், நிரஞ்சனமும், *௨௭. நாதபிந்துகலைகளுக்கப்பாற்பட்டதுமான அந்த ஸ்ரீகுருவிற்கு நமஸ்காரம். ()

---

* ௨௬. தத்துவமஸிமகாவாக்கியத்துள்ள கடைசிச்சொல் அஸி. அதன்றன்மை அஸித்துவம். அஸி=இருக்கிருய்.

* ௨௭ நாதமாவது வெண்கலமணியடித்தபின் கலீரென்றுண்டாகும் பொதுச்சத்தம்போன்ற தொடர்ச்சியாகிய சத்தம். பிந்துவாவது அநுஸ்வாரத்தி(ं ம் என்பத)ற்குப் பின் உண்டாகும் த்வனி. கலையாவது நாதத்தின் ஏகதேசம்.

निर्गुणं निर्मलं शांतं जंगमं स्थिरमेव च ।
व्याप्तं येन जगत्सर्वं तस्मै श्री.... ॥ ५३ ॥

எதனால் (எந்தப்பிரஹ்மத்தினால்) ஸ்தாவரஜங்கமமான ஜகத்து யாவும் வியாபிக்கப்பட்டிருக்கின்றனவோ, அது நிர்க்குணமும் நிர்மலமும் சாந்தமுமான பிரஹ்மமாம். அப்படிப்பட்ட பிரஹ்மவடிவ ஸ்ரீகுருவிற்கு நமஸ்காரம். (ருந)

त्वं पिता त्वं च मे माता त्वं बंधुस्त्वं च देवता ।
संसारप्रीतिभंगाय तस्मै श्री.... ॥ ५४ ॥

பிதா நீர்; மாதா நீர்; பந்து நீர்; தெய்வமும் நீரே. சம்சாரப்பிரீதியைக் கெடுக்கும் அத்தன்மைய ஸ்ரீ குருவாகிய உமக்கு நமஸ்காரம். (ருச)

यत्सत्त्वेन जगत्सत्यं यत्प्रकाशेन भात्येतत् ।
यदानंदेन नंदंति तस्मै श्री.... ॥ ५५ ॥

எதன் இருப்பினால் ஜகத்து உளதாகின்றதோ, எதன் விளக்கத்தால் இது விளங்குகின்றதோ, எதன் ஆநந்தத்தால் எல்லாம் ஆநந்திக்கின்றனவோ, அத்தன்மைய ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம். (ருரு)

यस्मिन् स्थितमिदं सर्वं भाति यद्भानरूपतः ।
यत्प्रीत्या प्रियं पुत्रादि तस्मै.... ॥ ५६ ॥

எதன்கண் இவ்வெல்லாம் நிலைத்திருக்கின்றனவோ, எதன் விளக்கவடிவத்தால் இவ்வெல்லாம் விளங்குகின்றனவோ, எதன் பிரியத்தால் புத்திரன்முதலியோர் பிரியமாயிருக்கின்றனரோ, அத்தன்மைய ஸ்ரீகுருவிற்கு நமஸ்காரம். (நிசு)

येन चेतयता हीदं चित्तं चेतयते नरः ।
जागृत्स्वप्नसुषुप्त्यादि तस्मै.... ॥ ५७ ॥

எவரால் இந்தச்சித்தம் சங்கற்பிக்கிறதோ, எவரால் நரன் ஜாக்கிரம் சொப்பனம் சுழுத்திமுதலியவற்றைச் சங்கற்பிக்கின்றானோ, அத்தன்மைய ஸ்ரீகுருவிற்கு நமஸ்காரம். (நிஎ)

यस्य ज्ञानमिदं विश्वं न दृश्यं भिन्नभेदतः ।
सदैकरूपरूपाय तस्मै श्री.... ॥ ५८ ॥

எதன் ஞானம் இவ்வெல்லாமுமாமோ, வேறுபட்ட பேதத்தால் (பேதம் நீங்கியதனால்) திருசியமன்றோ, அந்த என்றும் ஏகவடிவமாகிய ஸ்ரீகுருவிற்கு நமஸ்காரம். (நிஅ)

यस्य ज्ञातं मतं तस्य मतं यस्य न वेद सः ।
अनन्यभावभावाय तस्मै श्री.... ॥ ५९ ॥

எவனுக்கு அறியப்பட்டது அவனுக்கு இஷ்டமுள்ளதாமோ, எவனுக்கு இஷ்டமானதை அவன் அறிகிறதில்லையோ, அத்தன்மைய அந்நிய இருப்பு இல்லாதிருக்கும் ஸ்ரீகுருவிற்கு நமஸ்காரம். (௫௯)

यस्मै कारणरूपाय कार्यरूपेण भाति यत् ।
कार्यकारणरूपाय तस्मै श्री.... ॥ ६० ॥

காரணரூபமாயிருப்பது யாதோ, யாது காரியவடிவமாய் விளங்குகின்றதோ அத்தன்மைய காரியகாரணவடிவமான ஸ்ரீகுருவிற்கு நமஸ்காரம். (௬0)

नानारूपमिदं विश्वं न केनाप्यस्ति भिन्नता ।
कार्यकारणरूपाय तस्मै श्री.... ॥ ६१ ॥

நாநாவடிவமான இவ்வுலகு எதைவிட எவ்விதத்தாலும் வேறாகாதோ அத்தன்மைய காரியகாரணவடிவமான ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம். (௬௧)

ज्ञानशक्तिसमारूढतत्त्वमालाविभूषिणे ।
भुक्तिमुक्तिप्रदात्रे च तस्मै श्री.... ॥ ६२ ॥

ஞானசக்திசமாரூட (சிற்சத்தியோடு செவ்வையாய்ப் பொருந்தியவ)ராய்த் தத்துவமாலையினல் அலங்கரிக்கப் பட்டவரும், தம்மை யடைந்தவருக்குப் புத்திமுத்திகளைத் தருபவருமாகிய அந்த ஸ்ரீகுருவிற்கு நமஸ்காரம். (சுஉ)

अनेकजन्मसंप्राप्तकर्मबंधाविदाहिने ।
ज्ञानानलप्रभावेन तस्मै श्री.... ॥ ६३ ॥

ஞானக்கினியின் பிரபாவத்தால் (சிஷ்யர்களின் அநேக ஜன்மங்களி லடையப்பட்ட) கர்மபந்தங்களைத் தகிப்பவ ராகிய அந்த ஸ்ரீகுருவிற்கு நமஸ்காரம். (சுரு)

शोषणं भवसिंधोश्च दीपनं क्षरसंपदाम् ।
गुरोः पादोदकं यस्य तस्मै श्री.... ॥ ६४ ॥

பவசமுத்திரத்தை வற்றச்செய்வதும் க்ஷரமான சம் பத்தைக் கெடுப்பதும் எவரது பாதவுதகமாமோ, அத் தன்மைய ஸ்ரீகுருவிற்கு நமஸ்காரம். (சுச)

न गुरोराधिकं तत्त्वं न गुरोराधिकं तपः ।
न गुरोराधिकं ज्ञानं तस्मै श्री.... ॥ ६५ ॥

குரவனினும் மேலான தத்துவ மில்லை. குரவனினும் மேலான தவ மில்லை. குரவனைவிட மேலான ஞான

லில்லை. (ஆதலால்) அத்தன்மைய ஸ்ரீகுருவிற்கு நமஸ்கா ரம்.

मन्नाथः श्रीजगन्नाथो मद्गुरुः श्रीजगद्गुरुः ।
ममात्मा सर्वभूतात्मा तस्मै श्री.... ॥ ६६ ॥

எனது நாதன் ஸ்ரீஜகந்நாதனும். எனது குரு ஸ்ரீ ஜகத்குருவாம். எனது ஆத்மாவே சகல பூதங்களின் ஆத்மாவாம். (ஆதலால்) அத்தன்மைய ஸ்ரீகுருவிற்கு நமஸ்காரம். (சுசு)

गुरुरादिरनादिश्च गुरुः परमदैवतम् ।
गुरुमंत्रसमो नास्ति तस्मै श्री.... ॥ ६७ ॥

குரு ஆதியும் அநாதியுமாவர். குரு மேலான தெய்வமாவர். குருமந்திரத்திற்குச் சமானமானதில்லை. (ஆதலால், அந்த ஸ்ரீகுருவிற்கு நமஸ்காரம். (சுஎ)

एक एव परो बंधुर्विषमे समुपस्थिते ।
गुरुः सकलधर्मात्मा तस्मै श्री.... ॥ ६८ ॥

ஆபத்து நேர்ந்தகாலத்துச் சகல தர்மவடிவமான குரு ஒருவரே மேலான பந்துவாவர். ஆதலால் அத்தன்மைய ஸ்ரீகுருவிற்கு நமஸ்காரம். (சுஅ)

गुरुमध्ये स्थितं विश्वं विश्वमध्ये स्थितो गुरुः ।
गुरुर्विश्वं नमस्तेस्तु तस्मै श्री.... ॥ ६९ ॥

குருவின் நடுவில் விசுவ மிருக்கின்றது. விசுவநடுவில் குரு விருக்கின்றார். குருவே சகல சகத்து மாவர். அத்தன்மைய ஸ்ரீகுருவாகிய அவருக்கு நமஸ்காரம். (சுகூ)

भवारण्यप्रविष्टस्य दिङ्मोहभ्रांतिचेतसः ।
येन संदर्शितः पंथाः तस्मै श्री.... ॥ ७० ॥

பவ மென்னுங் காட்டிற் புகுந்து திசைமயக்க மென்னும் * உஅ. மோகத்லை யடைந்த சித்தமுள்ளவனுக்கு எவரால் வழி காட்டப்பட்டதோ அத்தன்மைய ஸ்ரீகுருவிற்கு நமஸ்காரம். (எ0)

तापत्रयाग्नितप्तानामशांतप्राणिनां मुदे ।
गुरुरेव परा गंगा तस्मै श्री.... ॥ ७१ ॥

* உகூ. தாபத்திரய மென்னும் அக்கினியாற் றகிக்கப் பட்ட சாந்தமின்றிய பிராணிகளுக்குச் சந்தோஷத்தின்

---

* உஅ அறிவிழப்பை. * உகூ. தாபம் மூன்று. அவை அத்தியாத்மம், அதிதெய்வம் அதிபூதம் என்பன. இவற்றின் இலக்கணம் விவேகசிந்தாமணி (வேதாந்தபரிச்சேதம்) ஸ்ரீ விசாரசந்திரோதய முதலியவற்றில் காண்க.

பொருட்டுக் குருவே மேலான கங்கையாவர். (ஆதலால்) அத்தன்மைய ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம். (எக)

अज्ञानेनाहिना ग्रस्ताः प्राणिनस्तान् चिकित्सकः ।
विद्यास्वरूपो भगवान् तस्मै श्री.... ॥ ७२ ॥

அஞ்ஞானமென்னும் பாம்பினால் விழுங்கப்பட்டவர்கள் பிராணிகள். அவர்களைச் சிகிச்சைசெய்பவர் வித்தியா சொரூபராகிய பகவானும். (ஆதலால்) அத்தன்மைய ஸ்ரீ குருவிற்கு நமஸ்காரம். (எஉ)

हेतवे जगतामेवं संसारार्णवसेतवे ।
प्रभवे सर्वविद्यानां शंभवे गुरवे नमः ॥ ७३ ॥

ஜகத்திற்கு ஏதுவாகியும், சம்சாரசமுத்திரத்திற்குச் சேதுவா (அணையா)கியும் சகலவித்தைகளுக்கும் பிறப்பிடமாயுமுள்ள சம்புவாகிய குருவிற்கு நமஸ்காரம். (எங)

ध्यानमूलं गुरोर्मूर्त्तिः पूजामूलं गुरोः पदम् ।
मंत्रमूलं गुरोर्वाक्यं मुक्तिमूलं गुरोः कृपा ॥ ७४ ॥

தியானத்திற்கு மூலம் குருவடிவம். பூஜைக்கு மூலம் குருவின் திருவடிகள். மந்திரத்திற்கு மூலம் குருவின் வாக்கியம். முத்திக்கு மூலம் குருவின் கிருபை. (எச)

सप्तसागरपर्यंतं तीर्थस्नानफलं यथा ।
गुरुपादोदकबिंदोः सहस्रांशेन तत्फलम् ॥ ७५ ॥

சப்தசாகரபரியந்தமுள்ள தீர்த்தங்களின் ஸ்நானத்தா லுண்டாகும் பயன் யாதோ, அது குருவினது *ஸ்ரீ பாதோதகத்துளியின் ஆயிரத்தொரு கூற்றினால் உண்டாகின்றது.

शिवे रुष्टे गुरुस्त्राता गुरौ रुष्टे न कश्चन ।
लब्ध्वा कुलगुरुं सम्यग्गुरुमेव समाश्रयेत् ॥ ७६ ॥

சிவன் கோபித்தகாலத்துக் குரு இரக்ஷிப்பவ ராகின்றார். குரவன் கோபித்தகாலத்து இரட்சிப்பவ ரொருவருமில்லை. ஆதலாற் குலகுருவை யடைந்து அக்குரவனையே செவ்வையாக ஆசிரயிக்கவேண்டும். (எசு)

मधुलुब्धो यथा भृंगः पुष्पात्पुष्पांतरं व्रजेत् ।
ज्ञानलुब्धस्तथा शिष्यो गुरोर्गुर्वंतरं व्रजेत् ॥ ७७ ॥

தேன்விருப்பமுள்ள வண்டானது எப்படிப் புஷ்பத்தினின்றும் புஷ்பத்தை யடைகின்றதோ, அப்படியே ஞான விருப்புடைய சிஷ்யன் ஓர் குருவினின்றும் மற்றோர் குருவை அடையவேண்டும். (எஎ)

---

* ஸ்ரீ பாதோதகம்—காலலம்பிய நீர்,

वंदे गुरुपदद्वंद्वं वाङ्मनोतीतगोचरम् ।
श्वेतरक्तप्रभाभिन्नं शिवशक्त्यात्मकं परम् ॥ ७८ ॥

வாக்குமனதுகளுக் கதீதகோசரமாயும், வெண்மை செம்மைப்பிரபைகளுக்கு அபின்னமாயும், சிவசக்திசொரூபமாயும், மேலானதாயுமுள்ள குருவின் திருவடிகளிரண்டினையும் நமஸ்கரிக்கின்றேன். (எ௮)

गुकारं च गुणातीतं रुकारं रूपवर्जितम् ।
गुणातीतमरूपं च यो दद्यात्स गुरुः स्मृतः ॥ ७९ ॥

குகாரம் குணாதீதமும், ருகாரம் ரூபநீங்கியதுமாம். குணாதீதத்தினையும் அருவத்தினையும் எவர் தருகின்றாரோ அவர் குரு வெனப்படுகின்றார். (எகூ)

अत्रिनेत्रः शिवः साक्षात् द्विबाहुश्च हरिस्स्मृतः ।
योऽचतुर्वदनो ब्रह्मा श्रीगुरुः कथितः प्रिये ॥ ८० ॥

பிரியமுள்ள பார்வதி! எவர் மூன்று நேத்திரமின்றிய சாக்ஷாத் சிவமாயும், இரண்டு புஜங்களுடைய விஷ்ணுவாயும், நான்கு முகங்களின்றிய பிரஹ்மாவாயும் இருக்கின்றனரோ, அவரே ஸ்ரீகுரு வெனப்படுகின்றார். (௮0)

अयं मयांजलिर्बद्धो दयासागरसिद्धये ।
यदनुग्रहतो जंतुश्चित्रसंसारमुक्तिभाक् ॥ ८१ ॥

எவருடைய அநுக்கிரகத்தால் ஜீவர்கள் விசித்திரமான சம்சாரத்தினின்றும் மோக்ஷத்தை அடைகின்றார்களோ, அவரது கிருபைக்கடற் சித்தித்தற்பொருட்டு என்னால் இவ் வஞ்சலி செய்யப்படுகின்றது. (அக)

श्रीगुरोः परमं रूपं विवेकचक्षुरग्रतः ।
मंदभाग्या न पश्यंति अंधाः सूर्योदयं यथा ॥ ८२ ॥

ஸ்ரீ குருவின் மேலான வடிவத்தினை விவேகக்கண்ணு டையோர் நேரிற் காண்பர். மந்தபாக்கியமுடையவர்கள் குருடன் சூரியோதயத்தைக் காணாததுபோற் காணார். (அஉ)

कुलानां कुलकोटीनां तारकस्तत्र तत्क्षणात् ।
अतस्तं सद्गुरुं ज्ञात्वा त्रिकालमभिवादयेत् ॥ ८३ ॥

குலங்களுக்கும் குலகோடிகளுக்கும் அங்கு அந்த க்ஷணமே தாரகமா யிருக்கின்றார். ஆதலால் அச்சற் குருவை அறிந்து மூன்றுகாலமும் வந்திக்க (வணங்க) வேண்டும். (அங)

श्रीनाथचरणद्वंद्वं यस्यां दिशि विराजते ।
तस्यां दिशि नमस्कुर्याद्भक्त्या प्रतिदिनं प्रिये ॥ ८४ ॥

ஸ்ரீநாதராகிய குருவின் சரணங்க ளிரண்டும் எத்திக்கில் விளங்குகின்றனவோ, அத்திக்கில் நாடோறும் அன்போடு நமஸ்கரித்தல்வேண்டும். (௮௪)

साष्टांगप्रणिपातेन स्तुवन्नित्यं गुरुं भजेत् ।
भजनात्स्थैर्यमाप्नोति स्वस्वरूपमयो भवेत् ॥ ८५ ॥

சாஷ்டாங்கநமஸ்காரத்தால் குருவைத் தினமும் துதித்துப் பஜிக்கவேண்டும். பஜித்தலால் ஸ்திரத்தன்மையை யடைகின்றான்; சுவசொரூபமய மாகின்றான். (௮௫)

दोर्भ्यां पद्भ्यां च जानुभ्यामुरसा शिरसा दृशा ।
मनसा वचसा चेति प्रणामोऽष्टांग उच्यते ॥ ८६ ॥

புஜங்களாலும், பதங்களாலும், முழந்தாட்களாலும், மார்பினாலும், சிரத்தாலும், கண்ணாலும், மனதாலும், வாக்காலும் வணங்குதல் அஷ்டாங்க மெனப்படும். (௮௬)

तस्यै दिशे सततमंजलिरेप नित्यं
प्रक्षिप्यतां मुखरितैर्मधुरैः प्रसूनैः ।

जागर्ति यत्र भगवान् गुरुचक्रवर्ती
विश्वस्थितिप्रलयनाटकनित्यसाक्षी ॥ ८७ ॥

எங்கே பகவான் குருசக்கரவர்த்தியானவர் விசுவத்தின் ஸ்திதிப்பிரளயநாடகத்திற்கு நித்தியசாக்ஷியாய் ஜாக்கிரமுள்ளவரா யிருக்கின்றனரோ, அத்திசையை நோக்கி மலர்ந்த மதுரமான புஷ்பங்களால் *௩௧. அஞ்சலி செய்க.

अभ्यस्तैः किमुदीर्घकालविमलैर्व्याधिप्रदैर्दुष्करैः ।
प्राणायामशतैरनेककरणैर्दुःखात्मकैर्दुर्जयैः ॥
यस्मिन्नभ्युदिते विनश्यति वलीवायुः स्वयं तत्क्षणात् ।
प्राप्तुं तत्सहजस्वभावमनिशं सेवेत चैकं गुरुम् ॥ ८८ ॥

*௩௨. துஷ்கரமும், வியாதியைத்தருவனவும், நெடுங்காலம் மலம் நீங்கியனவும், அப்பியசிக்கப்பட்டனவும், துக்கசொரூபமும், ஜயித்தற்கரியனவுமாகிய நூற்றுக் கணக்கான பிராணாயாமங்களாலும், அநேக கரணங்களாலும் யாது பயன்? எது உதயமாயின் வலியுள்ள வாயு தானே நசிக்கின்றதோ, அதனை அக்கணத்திலேயே அடைய, சகஜசுபாவமுள்ள ஏகமாகிய குருவை அநுதினமும் சேவிக்கவேண்டும். (அஅ)

---

* ௩௧ அஞ்சலிசெய்தல்=கைகூப்புதல்.

* ௩௨. செய்தற்கரியது.

ज्ञानं विना मुक्तिपदं लभ्यते गुरुभक्तितः ।
गुरोः समानतो नान्यत् साधनं गुरुमार्गिणाम् ॥ ८९ ॥

ஞானமின்றி முத்திபதம் குருபக்தியினு லடையப்படுகின்றது. குருமார்க்க முடையோருக்குக் குரவனுக்குச் சமானமான சாதனம் வேறில்லை. (அ௯)

यस्मात्परतरं नास्ति नेति नेतीति वै श्रुतिः ।
मनसा वचसा चैव सत्यमाराधयेद्गुरुम् ॥ ९० ॥

வேதமானது இப்படியன்று இப்படி யன்று என்னும் வாக்கியத்தால் எதனின் மேலான தில்லை யெனக் கூறுகின்றதோ, அத்தன்மைய சத்தியமான குருவை மனதினாலும் வாக்கினாலும் ஆராதித்தல்வேண்டும். (௯0)

गुरोः कृपाप्रसादेन ब्रह्मविष्णुशिवादयः ।
सामर्थ्यमभजन्सर्वे सृष्टिस्थित्यादिकर्मणि ॥ ९१ ॥

குருவின் கிருபையாகிய பிரசாதத்தால் பிரஹ்மா விஷ்ணு சிவன்முதலியோர் யாவரும் சிருஷ்டி, ஸ்திதி முதலிய தொழில்களில் சாமர்த்தியத்தைப் பெற்றார்கள். ()

देवकिन्नरगन्धर्वाः पितृयक्षास्तुतुंबुरुः ।
मुनयोपि न जानंति गुरुशुश्रूषणे विधिम् ॥ ९२ ॥

தேவகின்னரகந்தருவர்களும், பிதுரர் யக்ஷர் தும்புருவர் முனிவர்களும் குருபணிவிடையில் விதியினை அறியார். (௯௨)

महाहंकारगर्वेण तपोविद्यावलेन च ।
भ्रमंत्येतस्मिन्संसारे घटीयंत्रं यथा पुनः ॥ ९३ ॥

பெருமகங்காரமாகிய கர்வத்தினாலும், தவம் வித்தையென்பவற்றின் வலியாலும், * ௩௩. துலையந்திரத்தைப்போல மீண்டும் இச்சம்சாரத்தில் கீழ்மேலாய்ச் சுழல்வர்.

न मुक्तास्तु गंधर्वाः पितृयक्षास्तु चारणाः ।
ऋषयः सिद्धदेवाद्याः गुरुसेवापराङ्मुखाः ॥ ९४ ॥

குருசேவையிற் பராமுகர்களாகிய இருஷிகள் கந்தர்வர் பிதுர்க்கள் யக்ஷர் சாரணர் சித்தர் தேவர் முதலியோர் முத்தராகார். (௯௪)

ஸ்ரீ குருகீதை முதல் அத்தியாயம்

முற்றிற்று.

---

* ௩௩. துலையந்திரம். இஃது ஒரு வடக்கயிற்றில் ஒருமுகமாகப் பலகலயங்கள் கட்டப்பட்டுக் கீழ்மேலாகச் சுற்றி வரும் ஒருவகை ஏற்றம்.

உ

# ஸ்ரீ குருகீதை

## இரண்டாம் அத்தியாயம்.



ध्यानं शृणु महादेवि सर्वानंदप्रदायकम् ।
सर्वसौख्यकरं चैव भुक्तिमुक्तिप्रदायकम् ॥ ९५ ॥

மகாதேவி! சகலாநந்தத்தையும் தருவதும், சகல சௌக்கியத்தைத் தருவதும் போகமோக்ஷங்களைக் கொடுப்பதுமாகிய குருவின் தியானத்தைக் கேட்பாயாக. (௯௫)

श्रीमत्परं ब्रह्म गुरुं स्मरामि श्रीमत्परं ब्रह्म गुरुं भजामि
श्रीमत्परं ब्रह्म गुरुं वदामि श्रीमत्परं ब्रह्म गुरुं नमामि ॥ ९६ ॥

திருவுடைய(ஞானைசுவரியமுடைய) பரப்பிரஹ்மமாகிய குரவனை ஸ்மரிக்கின்றேன் திருவுடைய பரப்பிரஹ்மமாகிய குரவனைப் பஜிக்கின்றேன். திருவுடைய பரப்பிரஹ்மமாகிய குரவனைத் துதிக்கின்றேன் திருவுடைய பரப்பிரஹ்மமாகிய குரவனை வணங்குகின்றேன். (௯௬)

ब्रह्मानंदं परमसुखदं केवलं ज्ञानमूर्त्तिम् ।
द्वंद्वातीतं गगनसदृशं तत्त्वमस्यादिलक्ष्यम् ॥

एकं नित्यं विमलमचलं सर्वधीसाक्षिभूतम् ।
भावातीतं त्रिगुणरहितं सद्गुरुं तन्नमामि ॥ ९७ ॥

பிரஹ்மானந்தமும், பரமசுகத்தைத் தருவதும் ஞானவடிவினதும், துவந்துவாதீதமும், ஆகாயத்தைப்போன்றதும், தத்துவமஸி முதலியவற்றின் இலக்ஷியமும், ஏகமும், நித்தியமும், விமலமும், அசலமும், சகல புத்திகளின் சாக்ஷிவடிவமும், * ௩௪. பாவாதீதமும், முக்குணங்களின்றியதும், சற்குருவுமாகிய அவரை நமஸ்கரிக்கின்றேன். (௯௭)

हृदंबुजे कर्णिकमध्यसंस्थं सिंहासने संस्थितदिव्यमूर्त्तिम् ।
ध्यायेद्गुरुं चंद्रकलाप्रकाशं सच्चित्सुखाभीष्टवरं दधानम् ॥ ९८

இதயதாமரையில் * ௩௫. கர்ணிகைநடுவிலிருக்கும் சிம்ஹாசனத்தின்கண் வீற்றிருக்கும் திவ்வியவடிவினரும், சந்திரகலாப்பிரகாசரும், சச்சிதானந்தவடிவினரும், விரும்பிய * ௩௬. வரத்தைத் தரித்தவருமாகிய குருவைத் தியானித்தல்வேண்டும். (௯௮)

---

* ௩௪. பாவனைக்கெட்டாததும்.

* ௩௫. கர்ணிகை தாமரைமலரின் நடுவிலிருக்கும் காய். இதனைப் பொகுட்டென்பர்.

* ௩௬. வரம்=விரும்பியது கொடுத்தல்.

श्वेतांबरं श्वेतविलेपपुष्पं मुक्ताविभूषं मुदितं द्विनेत्रम् ।
वामांकपीठस्थितदिव्यशक्तिं मन्दस्मितं पूर्णकृपानिधानम् ॥

வெண்மைவஸ்திரம் தரித்தவரும், வெண்மைச்சந்தனம் புஷ்பமணிந்தவரும், முத்துமாலைகளாலலங்கரிக்கப்பட்டவரும், களிப்புடையவரும், இரண்டுநேத்திரங்களுள்ளவரும். இடப்பாகப்பீடத்துள்ள திவ்வியசக்தியினரும், புன்சிரிப்புடையவரும், பூர்ண *௯௭. கிருபாநிதானரும்.()

आनंदमानंदकरं प्रसन्नं ज्ञानस्वरूपं निजभावयुक्तम् ।
योगीन्द्रमीड्यं भवरोगवैद्यं श्रीमद्गुरुं नित्यमहं नमामि ॥

ஆநந்தசொரூபரும், ஆநந்தத்தைச் செய்பவரும், *௯௮. பிரசன்னரும், ஞானசொரூபரும், தனது தன்மையோடு கூடியவரும், யோகீந்திரரும், துதிக்கப்படுபவரும், *௯௯. பவரோகவைத்தியருமாகிய ஸ்ரீமானாகிய குருவை நித்தியம் நான் நமஸ்கரிக்கின்றேன். (௧௦௦)

वन्दे गुरूणां चरणारविन्दं सन्दर्शितस्वात्मसुखांबुधीनाम् ।
जनस्य येषां गुलिकायमानं संसारहालाहलमोहशांत्यै ॥ १०१

---

*௯௭. கிருபைக்கிடமானவரும்.
*௯௮. சந்தோஷமுடையவரும்.
*௯௯. பவரோகம்=பிறவிப்பிணி.

ஜனங்களின் சம்சார மென்னும் *சுO. ஆலாஹலமாகிய மோகம் கெடுதற்பொருட்டுக் குளிகையாக்கப்பட்டுள்ள சுவாத்மாநந்தசமுத்திரத்தினைச் செவ்வையாய்க் காட்டிய குரவனது திருவடித்தாமரைகளை வணங்குகின்றேன். (கOக)

यस्मिन् सृष्टिस्थितिध्वंसनिग्रहानुग्रहात्मकम् ।
कृत्यं पंचविधं शश्वद्भासते तं गुरुं भजेत् ॥ १०२ ॥

எவரிடத்துச் சிருஷ்டி ஸ்திதி சங்காரம் நிக்கிரகம் (திரோபவம்) அநுக்கிரக மென்னும் வடிவினதாகிய ஐவகைக்கிருத்தியமும் அடிக்கடி தோன்றுகின்றதோ அந்தக் குருவை நமஸ்கரிக்கின்றேன். (கO௨)

पादाब्जे सर्वसंसारदावकालानलं स्वके ।
ब्रह्मरन्ध्रे स्थितांभोजमध्यस्थं चंद्रमण्डलम् ॥ १०३ ॥

தனது பாததாமரையில் சகல சம்சாரங்களாகிய காட்டை யெரிக்கும் காலாக்கினியுடையவரும், பிரஹ்மரந்திரத்தின்கண்ணுள்ள தாமரைநடுவிலிருக்கும் சந்திரமண்டலத்தை யுடையவரும். (கOந)

अकथादित्रिरेखाब्जे सहस्रदलमण्डले ।
हंसपार्श्वत्रिकोणे च स्मरेत्तन्मध्यगं गुरुम् ॥ १०४ ॥

---

* சுO. விஷம்.

அகார ககார தகாரமுதலிய மூன்று ரேகைகளையுடைய தாமரையில் ஆயிரம் இதழ்களையுடைய மண்டலத்தில் ஹம்ஸத்தை பக்கங்களிலுள்ள திரிகோணத்தின்கண் அதன் நடுவிலுள்ளவருமாகிய குருவைத் தியானிக்கவேண்டும். ()

नित्यं शुद्धं निराभासं निराकारं निरञ्जनम् ।
नित्यबोधं चिदानन्दं गुरुं ब्रह्म नमाम्यहम् ॥ १०५ ॥

நித்தியமும், சுத்தமும், * சக. நிராபாசமும், நிராகாரமும், நிரஞ்சனமும், நித்தியபோதமும், சிதாநந்தமுமான பிரஹ்மமாகிய குருவை யான் நமஸ்கரிக்கின்றேன். (௧0௫)

सकलभुवनसृष्टिः कल्पिताशेषसृष्टिः
निखिलनिगमदृष्टिः सत्पदार्थैकसृष्टिः ।
अतद्गुणपरमेष्टिः सत्पदार्थैकदृष्टिः
भवगुणपरमेष्टिर्मोक्षमार्गैकदृष्टिः ॥ १०६ ॥
सकलभुवनभङ्गस्थापनास्तंभयष्टिः
सकरुणरसवृष्टिस्तत्त्वमालासमष्टिः ।
सकलसमयसृष्टिस्सच्चिदानन्ददृष्टिः
निवसतु मयि नित्यं श्रीगुरोर्दिव्यदृष्टिः ॥ १०७ ॥

---

* சக. ஆபாஸம் தோற்றம் (சாயை); அஃதிந்திரியத நிராபாஸம்.

சகலபுவனசிருஷ்டியும், கற்பிதமான வெல்லாவற்றை யும் படைப்பதும், சகலவேததிருஷ்டியும், சத்பதார்த்த மொன்றனையே படைப்பதும், பொய்க்கூட்டங்களின் பர மேஷ்டியும், சத்பதார்த்த மொன்றனையே காண்பதும், பவ குணபரமேஷ்டியும், மோக்ஷமார்க்க மொன்றனையே காண்ப தும், சகலபுவனங்களின் பங்கத்தை ஸ்தாபனஞ்செய்யும் ஸ்தம்பமும், கருணாரசவிருஷ்டியினையுடையதும், தத்துவ மாலைகளின் சமஷ்டியும், சகல சமயசிருஷ்டியும், சச்சிதா நந்த திருஷ்டியுமாகிய ஸ்ரீகுருவின் திவ்வியதிருஷ்டியா னது என்னிடத்து நித்தியமும் வசிக்குக. (௧0௬-௧0௭)

न गुरोरधिकं न गुरोरधिकं न गुरोरधिकं न गुरोरधिकम् ।
शिवशासनतः शिवशासनतः शिवशासनतः शिवशास-
नतः ॥ १०८ ॥

சிவசாசனத்தால் (ஆணையால்) குருவின் அதிகரித்த தில்லை. சிவசாசனத்தால் குருவின் அதிகரித்த தில்லை. சிவ சாசனத்தால் குருவின் அதிகரித்த தில்லை. சிவசாசனத்தால் குருவின் அதிகரித்ததில்லை. (௧0௮)

इदमेव शिवं इदमेव शिवं इदमेव शिवं इदमेव शिवम् ।
मम शासनतो मम शासनतो मम शासनतो मम शासनतः ॥

எனது சாஸனத்தால் இக்குருவே சிவம்; எனது சாஸனத்தால் இக்குருவே சிவம். எனது சாஸனத்தால் இக்குருவே சிவம். எனது சாஸனத்தால் இக்குருவே சிவம். ()

विदितं विदितं विदितं विदितं विजनं विजनं विजनं विजनम् ।
हरिशासनतो हरिशासनतो हरिशासनतो हरिशासनतः ॥

ஹரியின் சாஸனத்தால்(குரு)தனிமையானதும், அறியப்பட்டதுமாம். ஹரியின் சாஸனத்தால் தனிமையானதும், அறியப்பட்டதுமாம். ஹரியின் சாஸனத்தால் தனிமையானதும், அறியப்பட்டதுமாம். ஹரியின் சாஸனத்தால் தனிமையானதும், அறியப்பட்டதுமாம். (௧௧0)

एवं विधं गुरुं ध्यात्वा ज्ञानमुत्पद्यते स्वयम् ।
तदा गुरूपदेशेन मुक्तोऽहमिति भावयेत् ॥ १११ ॥

இவ்வாறு குருவைத் தியானித்தலால் இயல்பாக ஞானமுண்டாகின்றது. அப்போது குருவுபதேசத்தால் முக்தன் யானென்று பாவித்தல்வேண்டும். (௧௧௧)

गुरूपदेशितैर्मार्गैः मनश्शुद्धिं तु कारयेत् ।
अनित्यं खंडयेत्सर्वं यत्किंचिदात्मगोचरम् ॥ ११२ ॥

குருவினுபதேசிக்கப்பட்ட வழியினல் மனதைச்

சுத்தப்படுத்தவேண்டும். ஆத்ம *௪௨. கோசரமான இவ்வெல்லாவற்றையும் அநித்தியமெனக் கண்டித்தல்வேண்டும். (௧௧௨)

ज्ञेयं सर्वं प्रतीतं च ज्ञानं च मन उच्यते ।
ज्ञानं ज्ञेयं समं कुर्यात् नान्यः पंथा द्वितीयकः ॥ ११३ ॥

தோற்றுகின்ற யாவும் *௪௩. ஞேயமென்றும், மனம் ஞானமென்றும் சொல்லப்படுகின்றது. (ஆதலால்) ஞான ஞேயங்களைச் சமமாக்கவேண்டும். இதைவிட வேறு இரண்டாவது மார்க்கமில்லை. (௧௧௩)

किमत्र बहुनोक्तेन शास्त्रकोटिशतैरपि ।
दुर्लभा चित्तविश्रांतिः विना गुरुकृपां पराम् ॥ ११४ ॥

இங்கு வெகுவாய்ச் சொல்லுவதினுலென்ன? சித்த *௪௪. விச்ராந்தியானது குருகிருபையின்றி நூறுகோடி சாஸ்திரங்களாலும் அடைதற்கரிதாம். (௧௧௪)

करुणाखड्गपातेन छित्वा पाशाष्टकं शिशोः ।
सम्यगानंदजनकः सद्गुरुः सोऽभिधीयते ॥ ११५ ॥

---

* ௪௨. ஆத்மாவினுல் அறியப்படுவதான.

* ௪௩. அறியப்படுபொருள்.

* ௪௪. இளைப்பாறுதல்.

கருணையாகிய வாள்வீச்சினால் சிசுவின் * ௪௫. பாசங்களெட்டினையும் சேதித்துச் செவ்வையாய் ஆநந்தத்தையுண்டுபண்ணுபவர் எவரோ அவரே குருவெனப்படுகின்றார். (௧௧௫)

एवं श्रुत्वा महादेवि गुरुनिंदां करोति यः ।
स याति नरकान् घोरान् यावच्चन्द्रदिवाकरौ ॥ ११६ ॥

மகாதேவி! இவ்வாறு கேட்டுவிட்டுப்பின் எவன் குருநிந்தை செய்கின்றானோ, அவன் சந்திரசூரியர்களுள்ளபரியந்தம் கோரமான நரகத்தை யடைகிறான். (௧௧௬)

यावत् कल्पांतको देहस्तावद्देवि गुरुं स्मरेत् ।
गुरुलोपो न कर्त्तव्यः स्वच्छंदो यदि वा भवेत् ॥ ११७ ॥

எத்தனை கற்பம்வரையில் தேக மிருக்கின்றதோ, அதுவரையில் குருவை ஸ்மரிக்கவேண்டும். சுவச்சந்த (தடையற்றவ) னாயினும் * ௪௬. குருலோபஞ்செய்யலாகாது. ()

हुंकारेण न वक्तव्यं प्राज्ञशिष्यैः कदाचन ।
गुरोरग्रे न वक्तव्यं असत्यं तु कदाचन ॥ ११८ ॥

---

* ௪௫. தயை, சங்கை (சந்தேகம்), பயம், வெட்கம், நிந்தை, குலம், சீல(ஒழுக்க)ம், தனம் இவை எட்டும் பாச மெனப்படும்.

* ௪௬. குருவை மறக்கலாகாது.

பிராஞ்ஞர்களாகிய சிஷ்யர்கள் *௪௭. ஹுங்காரத்தால் ஒருநாளும் சொல்லலாகாது. குரவன்சந்நிதியில் ஒருநாளும் அசத்தியம் கூறலாகாது. (௧௧௮)

गुरुं त्वंकृत्य हुंकृत्य गुरुसान्निध्यभाषण: ।
अरण्ये निर्जले देशे संभवेद्ब्रह्मराक्षस:॥ ११९ ॥

குருவை நீயென்றும் ஹும்மென்றும் சொல்லி குரு சந்நிதியில் வாதிப்பவன் எவனோ, அவன் காட்டில் நீரில்லாத விடத்தில் பிரஹ்மராக்ஷஸனைப் பிறக்கின்றான். ()

गुरुकार्यं न लंघेत नापृष्ट्वा कार्यमाचरेत् ।
न ह्युत्तिष्ठेद्दिशेऽनत्वा गुरुसद्भावशोभित: ॥ १२० ॥

குருவின் * ௪௮. சத்பாவத்தால் சிறப்படைந்தவன் குருவின் காரியத்தைக் கடக்கலாகாது. குரவனைக் கேட்காமல் காரியத்தை யாசரிக்கலாகாது. குரவனுள்ள திசையை நோக்கி நமஸ்கரியாமல் எழுந்திருக்கலாகாது. (௧௨0)

न गुरोराश्रमे कुर्यात् दुष्पानं परिसर्पणम्
दीक्षा व्याख्या प्रभुत्वादि गुरोराज्ञां न कारयेत् ॥ १२१ ॥

---

* ௪௭. ஹுங்காரம்=ஒலிக்குறிப்பு
* ௪௮. சத்பாவம்=குரவனை ஈசனாக மதித்தல்:

குரவன் ஆசிரமத்தில் கெட்ட குடி, உலாவுதல், நித்திரை, வியாக்கியானம், பிரபுத்துவமுதலியவற்றைச் செய்யலாகாது. குருவின் ஆணையைச் செய்விக்கலாகாது (பிறரைக்கொண்டு செய்யலாகாது). (௧௨௧)

नोपाश्रमं च पर्यंकं न च पादप्रसारणम् ।
नांगभोगादिकं कुर्यात् न लीलामपरामपि ॥ १२२ ॥

* ௪௧. உபாச்சிரமம், மஞ்சத்திலிருத்தல், காலை நீட்டல், * ௩௦. அங்கபோகமுதலியவற்றைச் செய்யலாகாது. மற்றைய லீலை(விநோதங்)களையும் செய்யலாகாது. (௧௨௨)

गुरूणां सदसद्वापि यदुक्तं तन्न लंघयेत् ।
कुर्वन्नाज्ञां दिवारात्रौ दासवन्निवसेद्गुरौ ॥ १२३ ॥

குரவன்வாக்கியம் நன்மையாயினும் தீமையாயினும் அதனைக் கடக்கலாகாது. இரவும் பகலும் அவரதாணையைச் செய்துகொண்டு அடிமையைப் போல குரவனிடத்தே வசிக்கவேண்டும். (௧௨௩)

अदत्तं न गुरोर्द्रव्यमुपभुंजीत कर्हिचित् ।
दत्तं च रङ्कवद् ग्राह्यं प्राणोप्यैतेन लभ्यते ॥ १२४ ॥

---

* ௪௧. உபாச்சிரமம்=பக்கத்துக்குடில்
* ௩௦. அங்கபோகம்=பாதம்பிடித்துக்கொள்ளல்முதலியன,

கொடுக்கப்படாத குருவின் திரவியத்தை ஒருபோது மநுபவிக்கலாகாது. கொடுத்ததை அடிமையைப்போற் கொள்ளவேண்டும். அதனாற் பிராணனும் பெறப்படுகின்றது. (௧௨௪)

पादुकासनशय्यादि गुरुणा यदभीष्टितम् ।
नमस्कुर्वीत तत्सर्वं पादाभ्यां न स्पृशेत् क्वचित् ॥ १२५ ॥

குரவனால் விரும்பப்படும் பாதுகை ஆசனம் படுக்கை முதலிய எல்லாவற்றையும் நமஸ்கரிக்கவேண்டும். எதனையும் பாதங்களால் பரிசிக்கலாகாது. (௧௨௫)

गच्छतः पृष्ठतो गच्छेत् गुरुच्छायां न लंघयेत् ।
नोल्बणं धारयेद्वेषं नालंकारांस्ततोल्बणान् ॥ १२६ ॥

குரவன் நடக்கும்போது அவர்பின்னே செல்லவேண்டும். குரவன் நிழலைத் தாண்டலாகாது. அதிக வேஷத்தையும் அப்படியே அதிக அலங்காரத்தையும் தரிக்கலாகாது.()

गुरुनिंदाकरं दृष्ट्वा धावयेदथ वासयेत् ।
स्थानं वा तत्परित्याज्यं जिह्वा छेदाक्षमो यदि ॥ १२७ ॥

குருவை நிந்திப்பவனைப் பார்த்து நாவைச் சேதிக்க சாமர்த்திய மில்லை யாயின், அவ்விடத்தை விட்டு ஓடிப்

பின் வந்து வசித்தல்வேண்டும். அல்லது அந்த இடத்தை யே விட்டுவிடவேண்டும். (௧௨௭)

नोच्छिष्टं कस्यचिद्देयं गुरोराज्ञां न च त्यजेत् ।
कृत्स्नमुच्छिष्टमादाय नित्यमेव व्रजेद् बहिः ॥ १२८ ॥

குருவின் * ௩௧. உச்சிட்டத்தை யொருவருக்கும் கொடுக்கலாகாது; (அவர்) ஆணையை விடலாகாது. உச்சிட்டம் முழுவதையும் ஏற்றுக்கொண்டு தினமும் வெளியிற் செல்லவேண்டும். (௧௨௮)

नानृतं नाप्रियं चैव न गर्वं नापि वा बहु ।
न नियोगपरं ब्रूयात् गुरोराज्ञां विभावयेत् ॥ १२९ ॥

பொய்யும், பிரியமில்லாததும், கர்வமுடையதும், அதிகமானதும், கட்டளையிடுதற்றன்மையதுமாகிய வார்த்தைகளைப் பேசலாகாது. குரவன் ஆணையை மதித்தல் வேண்டும். (௧௨௯)

प्रभो देवकुलेशान स्वामिन्राजन् कुलेश्वर ।
इति संबोधनैर्भीतो गुरुभावेन सर्वदा ॥ १३० ॥

பிரபுவே! தேவகுலத்திற்கு ஈசானனே! ஐயனே! அரை

* ௩௧. உண்டு மிகுந்தது.

யனே! (எம்) குலவிறைவனே! யென்னும் விளிகளால் (அவரை) அழைப்பவனாய் எப்போதும் குருபாவனையோடு பயமுடையவனா யிருத்தல் வேண்டும். (கநுo)

मुनिभिः पन्नगैर्वापि सुरैर्वा शापितो यदि ।
कालमृत्युभयाद्वापि गुरुः संत्राति पार्वति ॥ १३१ ॥

பார்வதி! முனிவராலும் * ருஉ. பன்னகராலும் சுரர்களாலும் சபிக்கப்பட்டவனாயினும், அல்லது காலமிருத்தியுவினாற் பயந்தவனாயினும், அதனின்றும் அவனைக் குருவானவர் இரக்ஷிப்பார். (கநுக)

अशक्ता हि सुराद्याश्च ह्यशक्ता मुनयस्तथा ।
गुरुशापप्रपन्नस्य रक्षणाय च कुत्रचित् ॥ १३२ ॥

குருவின் சாபத்தையடைந்தவனை இரக்ஷித்தற்குச் சுரர்முதலியோரும், அப்படியே முனிவர்முதலியோரும் எவ்விடத்தும் சக்தராகார். (கநுஉ)

मंत्रराजमिदं देवि गुरुरित्यक्षरद्वयम् ।
स्मृतिवेदार्थवाक्यानां गुरुस्साक्षात्परं पदम् ॥ १३३ ॥

தேவி! ஸ்மிருதிவேதவாக்கியங்களுள் இந்தக் குருவென்

* ருஉ. நாகர்.

னும் இரண்டெழுத்தும் மந்திரசிரேஷ்டமாம். குருவே சாக்ஷாத்பரமபதமாம். (கங௩)

सत्कारमानपूजार्थं दण्डकाषायधारणः ।
स संन्यासी न वक्तव्यः संन्यासी ज्ञान तत्परः ॥ १३४ ॥

மரியாதை, மானம், பூஜைமுதலியவற்றின்பொருட்டுத் தண்டகாஷாயங்களைத்தரித்தவன் எவன் அவன் சந்நியாசி யெனத்தகான். ஞானதற்பரனே சந்நியாசியவான். (கங௪)

विजानंति महावाक्यं गुरोश्चरणसेवया ।
ते वै संन्यासिनः प्रोक्ता इतरे वेषधारिणः ॥ १३५ ॥

குருவின்பாதசேவையினால் மகாவாக்கியத்தை யறிகின்றவனெவனோ அவனே சந்நியாசி யெனப்படுவான். மற்றையோர் வேஷதாரிகளாவர். (கங௫)

नित्यं ब्रह्म निराकारं निर्गुणं बोधयेत्परम् ।
भासयन्ब्रह्मभावं च दीपो दीपांतरं यथा ॥ १३६ ॥

ஓர்விளக்கு மற்றோர்விளக்கை விளக்குவதுபோல (குருவானவர்) பிரஹ்மத்தன்மையாய் விளக்குகின்றவராய் நித்தியமும் நிராகாரமும் நிர்க்குணமுமானபரப்பிரஹ்மத்தைப் போதித்தல்வேண்டும். (கங௬)

गुरुप्रसादतः स्वात्मन्यात्मारामनिरीक्षणात् ।
समता मुक्तिमार्गेण स्वात्मज्ञानं प्रवर्तते ॥ १३७ ॥

குரவன் கிருபையால் தனதாத்மாவினிடத்து ஆத்மா ராமனை நோக்குதலால் சமத்தன்மையாகிய முக்திமார்க் கத்தால் தனது ஆத்மஞானம் பிரவிருத்திக்கின்றது. ()

आब्रह्मस्तंबपर्यंतं परमात्मस्वरूपकम् ।
स्थावरं जंगमं चैव प्रणमामि जगन्मयम् ॥ १३८ ॥

பிரஹ்மாமுதல் * ௩௩. ஸ்தம்பபரியந்தமான ஸ்தா வரமும் ஜங்கமமும் பரமாத்மசொரூபமாம். ஆதலால் ஜகமயமான அதனை நமஸ்கரிக்கின்றேன். (௧௩௮)

वन्देहं सच्चिदानन्दं भावातीतं जगद्गुरुम् ।
नित्यं पूर्णं निराकारं निर्गुणं स्वात्मसंस्थितम् ॥ १३९ ॥

சச்சிதாநந்தமும், * ௩௪. பாவாதீதமும், நித்தியமும், பூர்ணமும், நிராகாரமும், நிர்க்குணமும் தனதாத்மாவிலிருப் பதுமான சகத்குருவை நமஸ்கரிக்கின்றேன். (௧௩௯)

---

* ௩௩. ஸ்தம்ப மென்பது ஓர்வகைச் சிறுபுல். ஓர்வகைச்சிறு பூச்சி யென்று சொல்லுவாரு முண்டு.

* ௩௪. பாவிக்கப்படாதது.

परात् परतरं ध्यायेन्नित्यमानंदकारकम् ।
हृदयाकाशमध्यस्थं शुद्धस्फटिकसन्निभम् ॥ १४० ॥

மேலானவற்றிற் கெல்லாம் மேலானதும், நித்தியமானந்தத்தை யுண்டுபண்ணுவதும், இதயாகாயநடுவிலிருப்பதும், சுத்தஸ்படிகத்தைப் போன்றதுமான குருவை நமஸ்கரிக்கின்றேன். (கச0)

स्फटिके स्फाटिकं रूपं दर्पणे दर्पणो यथा ।
तथात्मनि चिदाकारमानन्दं सोहमित्युत ॥ १४१ ॥

ஸ்படிகத்தில் ஸ்படிகத்தன்மைவடிவமும், கண்ணுடியிற் கண்ணுடியும் எப்படி அபேதமோ, அப்படியே ஆத்மாவினிடத்துச் சிதாகார வாநந்தமெதுவோ அது யானென்பது நிச்சயம். (கசக)

अंगुष्टमात्रं पुरुषं ध्यायेच्च चिन्मयं हृदि ।
तत्र स्फुरति यो भावः शृणु तत्कथयामि ते ॥ १४२ ॥

அங்குஷ்டமாத்திரமும் சின்மயமுமாகிய புருஷனை இதயத்தில் தியானிக்கின், அங்கு எந்தத்தன்மை விளங்கு (ஸ்புரிக்)கின்றதோ, அதனை உனக்குச் சொல்லுகின்றேன்; கேட்பாயாக. (கசஉ)

अजोहममरोहं च अनादिनिधनो ह्यहम् ।
अविकारश्चिदानन्दो ह्यणीयान् महतो महान् ॥ १४३ ॥

அணுவிற்கு அணுவும், மகத்திற்கு மகத்தும், அவிகாரமும், சிதாநந்தமுமான அஜன் யான்; அமரன் யான்; அநாதிநித்தன் யான். (கசங)

अपूर्वमपरं नित्यं स्वयंज्योतिर्निरामयम् ।
विरजं परमाकाशं ध्रुवमानन्दमव्ययम् ॥ १४४ ॥

* ருரு. அபூர்வமும், * ருசு. அபரமும், நித்தியமும், * ருஎ. சுயஞ்சோதியும், * ருஅ. நிராமயமும், * ருகூ. விரஜமும், * சுo பரமாகாயமும், * சுக. துருவமும், ஆநந்தமும், * சுஉ. அவ்வியயமும். (கசச)

अगोचरं तथाऽगम्यं नामरूपविवर्जितम् ।
निःशब्दं तु विजानीयात् स्वभावात् ब्रह्म पार्वति ॥ १४५ ॥

---

* ருரு. முன்னில்லாதது.
* ருசு. தன்னைவிட மேலானதொன்றில்லாதது.
* ருஎ. தானாய் விளங்குவது.
* ருஅ. நோயில்லாதது.
* ருகூ. அழுக்கின்றியது.
* சுo. மேலான வெளி.
* சுக. என்றுமுள்ளது.
* சுஉ. குறைவு நிறைவில்லாதது.

பார்வதி! * சுரு. அகோசரமும், அப்படியே அசும்யமும் (அறியப்படாததும்), நாமரூபங்களின்றியதும், சத்தமின்றியதுமாகிய பிரஹ்மம் சுபாவமாக அறியப்படுகின்றது. (௧௪௫)

यथा गंधस्वभावत्वं कर्पूरकुसुमादिषु ।
शीतोष्णत्वस्वभावत्वं तथा ब्रह्मणि शाश्वतम् ॥ १४६ ॥

எப்படிக் கர்ப்பூரம் புஷ்ப * சுச. முதலியவற்றில் கந்தசுபாவமும், சீதோஷ்ணத்தன்மைகளின் சுபாவமுமிருக்கின்றதோ, அப்படியே பிரஹ்மத்தில் சாசுவதத்தன்மை யிருக்கின்றது. (௧௪௬)

यथा निजस्वभावेन कुण्डलकटकादयः ।
सुवर्णत्वेन तिष्ठंति तथाहं ब्रह्म शाश्वतम् ॥ १४७ ॥

குண்டலம் கடகமுதலியன எப்படி நிஜசுபாவத்தால் சுவர்ணத்தன்மையா யிருக்கின்றனவோ, அப்படியே யான் பிரஹ்மமாகிய சாசுவதம். (௧௪௭)

---

* கரு. எதற்கு மெட்டாததும்,

* கச. முதலிய வென்பதனுல் நீர்நெருப்புகளைக் கொண்டு அவற்றிலுள்ள குளிர்ச்சி சூடெனி னுமமையும்.

स्वयं तथा विधो भूत्वा स्थातव्यं यत्र कुत्र चित् ।
कीटो भृङ्ग इव ध्यानात् यथा भवति तादृशः ॥१४८॥

* கசுஅ. கீடம் (புழு) குளவிபோன்ற தியானத்தினுல் எப்படி அவ்வடிவமே யாகின்றதோ, அப்படியே (யான் பிரஹ்மமென்னும் பாவனையால்) இயல்பாய் அத்தன்மையனுகி எவ்விடத்திலாயினு மிருத்தல்வேண்டும். (கசஅ)

गुरुध्यानं तथा कृत्वा स्वयं ब्रह्ममयो भवेत् ।
पिण्डे पदे तथा रूपे मुक्तास्ते नात्र संशयः ॥ १४९ ॥

அப்படியே அந்தக்கரணத்தில் குருவைத் தியானித்தலால் தானே பிரஹ்மமய மாகின்ருன். பிண்டத்திலும் பதத்திலும் அப்படியே உருவத்திலும் அவர்கள் முத்தராகின்றனர். இதிற் சமுசய மில்லை. (கசகூ)

---

*கசுஅ. குளவி (வண்டு) ஒரு புழுவினைக் கொட்டி அதனைக் கூண்டில் அடைத்து வைக்கும். அப்புழு பயத்தால் கொட்டிய அக்குளவியினையே நினைத்துகொண்டிருந்து காலாந்தரத்தில் அக்குளவிவடிவாய்க் கூட்டைவிட்டு வெளியில் பறந்துபோகும். அது போல் குரவனுபதேசத்தால் இச்சீவன் யான் பிரஹ்ம மென்று இடைவிடாது நினைத்துகொண்டிருந்து அவ்வடிவமே யாகின்ருன் இதனையே பிரமரகீடநியாய மென்பர்.

पार्वत्युवाच :—

पिण्डं किं तु महादेव पदं किं समुदाहृतम् ।
रूपातीतं च रूपं किं एतदाख्याहि शंकर ॥ १५० ॥

*பார்வதிதேவி கேட்கலாயினர்:— மகாதேவரே! பிண்டமென்பது யாது? பதமென்பது யாது? உருவமென்பது யாது? உருவாதீதமென்பது யாது? சங்கரரே! இதனையெனக்குச் சொல்லியருளல்வேண்டும்.* (கருo)

श्रीमहादेव उवाच :—

पिण्डं कुण्डलिनी शक्तिः पदं हंसमुदाहृतम् ।
रूपं बिंदुरिति ज्ञेयं रूपातीतं निरञ्जनम् ॥ १५१ ॥

*ஸ்ரீ மகாதேவர் சொல்லாயினர் :—பிண்டம் குண்டலினிசக்தி; பதம் ஹம்ஸமெனப்படுகின்றது. உருவம் விந்துவென்று அறியத்தக்கதாம். உருவாதீதம் நிரஞ்சனமாம்.* (கருக)

पिण्डे मुक्ताः पदे मुक्ता रूपे मुक्ता वरानने ।
रूपातीतेषु ये मुक्तास्ते मुक्ता नात्र संशयः ॥ १५२ ॥

*பார்வதி! பிண்டத்தில் முக்தர்களும், பதத்தில் முக்தர்களும், உருவத்தில் முக்தர்களும், உருவாதீதத்தில் முக்தர்களுமாகிய அவர்கள் முக்தர்களே. இதிற் சமுசயமில்லை.*

गुरोर्ध्यानेनेति नित्यं देही ब्रह्ममयो भवेत् ।
स्थितश्च यत्र कुत्रापि मुक्तोसौ नात्र संशयः ॥ १५३ ॥

நித்தியம் குருவைத் தியானித்தலால் தேகி பிரஹ்ம மய மாகின்றான். அவன் எவ்விடத்திருக்கினும் முக்தனாகின் றான். இதிற் சமுசய மில்லை. (௧௫௩)

ज्ञानं वैराग्यमैश्वर्यं यशः श्रीः स्वमुदाहृतम् ।
षड्गुणैश्वर्ययुक्ताश्च भगवान् श्रीगुरुः प्रिये ॥ १५४ ॥

பிரியமுள்ளவளே! ஞானம், வைராக்கியம், ஐசுவரி யம், கீர்த்தி, திரு, சொல்லப்பட்ட செல்வ மென்னும் ஆறு குணங்களாகிய ஐசுவரியத்தை யுடையவர் பகவானவர். அவரே ஸ்ரீகுரு. (௧௫௪)

गुरुश्शिवो गुरुर्देवो गुरुर्बंधुश्शरीरिणाम् ।
गुरुरात्मा गुरुर्जीवो गुरोरन्यन्न विद्यते ॥ १५५ ॥

சரீரிகளுக்குக் குரவனே சிவம்; குரவனே தேவன்; குரவனே பந்து; குரவனே ஆத்மா; குரவனே ஜீவன்; குர வனுக்கு வேறான தில்லை. (௧௫௫)

एकाकी निस्पृहश्शान्तश्चितासूयादिवर्जितः।
बाल्यभावेन यो भाति ब्रह्मज्ञानी स उच्यते ॥ १५६ ॥

தனித்தவனாய், ஆசையற்றவனாய்ச், சாந்தனாய், வியாகூலம் அருவருப்புமுதலியவையில்லாதவனாய்ப், பாலியத்தன்மையனாய், எவன் விளங்குகின்றானோ, அவன் பிரஹ்மஞானி யெனப்படுகின்றான். (௧௫௬)

न सुखं वेदशास्त्रेषु न सुखं मंत्रयंत्रके ।
गुरोः प्रसादादन्यत्र सुखं नास्ति महीतले ॥ १५७ ॥

வேதசாஸ்திரங்களிற் சுகமில்லை. மந்திரயந்திரங்களிலும் சுகமில்லை. பூமியில் குரவன்பிரசாதத்திற் கந்நியமானவிடங்களிற் சுகமென்பதில்லை. (௧௫௭)

चार्वाकवैष्णवमते सुखं प्राभाकरे नहि ।
गुरोः पादांतिके यद्वत् सुखं वेदांतसंमतम् ॥ १५८ ॥

குரவன்பாதத்தருகிலுண்டாகும் சுகத்தைப்போன்ற சுகம் சார்வாகவைஷ்ணவமதங்களிலும், பிரபாகரமதத்திலுமில்லையென்பது வேதாந்தசம்மதம். (௧௫௮)

न तत्सुखं सुरेंद्रस्य न सुखं चक्रवर्तिनां ।
यत्सुखं वीतरागस्य मुनेरेकांतवासिनः ॥ १५९ ॥

எந்தச் சுகம் இராகமொழிந்த முனியாகிய ஏகாந்தவாசிக்குண்டாகின்றதோ, அந்தச்சுகம் இந்திரனுக்குமுண்டாகிறதில்லை; சக்கிரவர்த்திகளுக்குமுண்டாகிறதில்லை. ()

रसं ब्रह्म पिबेद्यश्च तृप्तो यः परमात्मनि ।
इंद्रं च मन्यते रंकं नृपाणां तत्र का कथा ॥ १६० ॥

இரஸமாகிய பிரஹ்மத்தை எவன் பருகுகின்றானோ, எவன் பரமாத்மாவினிடத்துத் திருப்தனா யிருக்கின்றானோ, அவன் இந்திரனை அடிமையாகக் கருதுகின்றானெனின், அங்கு அரசர்களின் வார்த்தையைச் சொல்லுவானேன்? ()

एक एवाद्वितीयोहं गुरुवाक्येन निश्चितः ।
एवमभ्यस्यता नित्यं न सेव्यं वै वनांतरम् ॥ १६१ ॥

ஒரே * ஸா. அத்துவிதீயன் யானென்பது குருவாக்கியத்தினால் நிச்சயிக்கப்பட்டது. இவ்வாறு தினமும் அப்பியசிப்பவனால் வனாந்தரம் சேவிக்கவேண்டியதாகாது. ()

अभ्यासान्निमिषेणैव समाधिमधिगच्छति ।
आजन्मजनितं पापं तत्क्षणादेव नश्यति ॥ १६२ ॥

அப்பியாசத்தினால் நிமிஷமாத்திரத்தில் சமாதியை அடைகின்றான். ஜன்மபரிபந்த முண்டாகிய பாபங்கள் யாவும் அக்ஷணமே நசிக்கின்றன. (௧௬௨)

---

* ஸா. இரண்டாவதற்றவன்.

किमावाहनमव्यक्ते व्यापके किं विसर्जनम् ।
अमूर्त्तौ च कथं पूजा कथं ध्यानं निरामये ॥ १६३ ॥

* ௯௭. அவ்வியக்தத்தில் * ௯௮. ஆவாகன மேது? வியாபகத்தில் * ௯௯. விஸர்ஜன மேது? * ௱. அமூர்த்தத்திற் பூஜை யேது? நிராமயத்திற் றியான மெப்படி? ( )

गुरुर्विष्णुः सत्त्वमयो राजसश्चतुराननः ।
तामसो रुद्ररूपेण सृजत्यवति हंति च ॥ १६४ ॥

குருவானவர் இராஜஸமயமான பிரஹ்மாவாய்ச் சிருஷ்டிக்கின்றார். சத்துவமயமான விஷ்ணுவாய் இரக்ஷிக்கின்றார். தாமஸருத்திரவடிவமாய்ச் சங்கரிக்கின்றார். (௧௬௪)

स्वयं ब्रह्ममयो भूत्वा तत्परञ्चावलोकयेत् ।
परात्परतरं नान्यत् सर्वगतन्निरामयम् ॥ १६५ ॥

ஸ்வயம் (தானே) பிரஹ்மமயமாய் அந்தப் பரத்தைப் பார்க்கின்றான். பரத்திற்கு மேலானது வேறில்லை. அஃது எல்லாவற்றிலு மிருக்கும் நிராமயமாம். (௧௬௫)

---

* ௯௭. வெளிப்படாதது
* ௯௮. ஓர் ஆசனத்தி எழுந்தருளச்செய்தல்.
* ௯௯. அவ்வாசனத்திருந்தும் முன்னிருந்தவிடத்திற் கனுப்புதல்.
* ௱. வடிவமில்லாதது.

तस्यावलोकनं प्राप्य सर्वसंगविवर्जितः ।
एकाकी निस्पृहः शांतः स्थातव्यं तत्प्रसादतः ॥ १६६ ॥

அவரது அவலோகனத்தை (பார்வையை) யடைந்து அவரது பிரசாதத்தால் சர்வசங்கத்தையும் விட்டவனுய்த் தனித்தவனுப் ஆசையற்றவனுய்ச் சாந்தனுய் நிலைத்திருக்க வேண்டும். (கசுசு)

लब्धं वाऽथ न लब्धं वा स्वल्पं वा बहुलं तथा ।
निष्कामेनैव भोक्तव्यं सदा संतुष्टमानसः ॥ १६७ ॥

எப்போதும் சந்தோஷமடைந்த மனதுடைய அவன் பெற்றதையும் பெருததையும் அற்பத்தையும் அதிகத்தை யும் நிஷ்காமமாகவே அநுபவிக்கவேண்டும். (கசுஎ)

सर्वज्ञपदमित्याहुर्देही सर्वमयो भुवि ।
सदानंदः सदा शांतो रमते यत्र कुत्रचित् ॥ १६८ ॥

புவியில் தேகி சதாநந்தனுப் என்றும் சாந்தனுய்ச் சர்வமயனுப் எந்தெந்த விடத்தில் இரமிக்கின்றுனே, அதனைச் சர்வஞ்ஞபத மென்று கூறுவர். (கசுஅ)

यत्रैव तिष्ठते सोपि सदेशः पुण्यभाजनः ।
मुक्तस्य लक्षणं देवि तवाग्रे कथितं मया ॥ १६९ ॥

எந்தவிடத்து அவனிருக்கின்றானோ அத்தேசம் புண்ணியக்ஷேத்திரமாம். தேவி! முத்தனிலக்கணம் இன்றான் என்றுச் சொல்லப்பட்டது. (௧௬௯)

उपदेशस्त्वयं देवि गुरुमार्गेण मुक्तिदः ।
गुरुभक्तिस्तथात्यंता कर्तव्या वै मनीषिभिः ॥ १७० ॥

தேவி! இவ்வுபதேசமானது குரவன்வழியாக முக்தியைத் தருவதாம். அப்படியே விவேகிகளால் குருபக்தியானது அத்தியந்தம் செய்யத்தக்கதாம். (௧௭0)

नित्ययुक्ताश्रयः सर्वो वेदकृत्सर्ववेदकृत् ।
स्वपरज्ञानदाता च तं वंदे गुरुमीश्वरम् ॥ १७१ ॥

நித்தியமும் பொருத்தமுள்ள ஆசிரமங்களெல்லாமாயிருப்பவரும், வேதத்தைச் செய்தவரும், சர்வஞானங்களையுண்டுபண்ணுபவரும், தனது ஞானத்தையும் பிறஞானத்தையும் தருபவருமாவர். அந்தக் குரவனாகிய ஈசுவரனை நமஸ்கரிக்கின்றேன். (௧௭௧)

यद्यप्यधीता निगमाः षडंगा आगमाः प्रिये ।
अध्यात्मादीनि शास्त्राणि ज्ञानं नास्ति गुरुं विना ॥ १७२ ॥

பிரியமுள்ளவனே! வேதங்களையும், * ௭௧. ஆறங்கங்களையும், ஆகமங்களையும், * ௭௨. அத்தியாத்மமுதலிய சாஸ்திரங்களையும் ஓதி யிருந்தபோதினும் குருவின்றி ஞான முண்டாகாது. (௧௭௨)

निरस्तसर्वसंदेहो एकीकृत्य सुदर्शनम् ।
रहस्यं यो दर्शयति भजामि गुरुमीश्वरम् ॥ १७३ ॥

எவர் சகல சந்தேகங்களு மொழிந்தவராய் இரகசியமான நல்ல தரிசனத்தை யொன்றுபடுத்திக் காட்டுகின்றாரோ, அத்தன்மைய குருவாகிய ஈசுவரனைப் பஜிக்கின்றேன். (௧௭௩)

ज्ञानहीनो गुरुस्त्याज्यो मिथ्यावादी विडंबकः ।
स्वविश्रांतिं न जानाति परशांतिं करोति किम् ।। १७४ ॥

ஞானஹீனனாகிய குரு விடத்தக்கவனாவன். அவன் மித்தியாவாதியாகிய * ௭௩. விடம்பகனாவன். தனது விசிராந்தியை யறியாதவன் பிறர்சாந்தியைச் செய்வனோ? என்னே? (௧௭௪)

---

* ௭௧. ஆறங்கம் சிக்ஷை, கல்பம், வியாகரணம், நிருத்தம், சந்தசு, ஜோதிஷம் என்பன.

* ௭௨. ஆத்மாவை உணர்த்தும் நூல் அத்தியாத்மசாஸ்திரம்.

* ௭௩. விடம்பகன் = வேஷதாரி; வஞ்சகன்.

शिलायाः किं परं ज्ञानं शिलासंघप्रतारणे ।
स्वयं तर्तुं न जानाति परं निस्तारयेत्कथम् ॥ १७५ ॥

சிலைக்கு மேலான ஞானம் எது? சிலையின் (கல்லின்) சேர்க்கையைப் பிரிக்கும்போது அது தன்னைத் தப்பித் துக்கொள்ள வறியாது. எங்ஙனம் பிறரைத் தப்புவிக்கும்? (அதுபோலத் தன்னைக் காத்துக்கொள்ளாதவன் பிறரை எப்படிக் காப்பன்? என்பது கருத்து). (கஎரு)

न वन्दनीयास्ते कष्टं दर्शनाद्भ्रांतिकारकाः ।
वर्जयेत्तान् गुरून् दूरे धीरस्य तु समाश्रयेत् ॥ १७६ ॥

ஐயோ! கஷ்டம்! அவர்கள் வந்திக்கத்தக்கவர்களல் லர். தரிசனத்தால் பிராந்தியை யுண்டுபண்ணுபவ ராவர். அத்தன்மைய குரவரை யொழித்துத் தீரரைச் செவ்வையா யாசரிக்கவேண்டும். (கஎசு)

पाखंडिनः पापरता नास्तिका भेदबुद्धयः ।
स्त्रीलंपटा दुराचाराः कृतघ्ना बकवृत्तयः ॥ १७७ ॥

*எச. பாஷண்டிகளும், பாவத்தையே செய்வோ ரும், நாஸ்திகரும், பேதபுத்தியுடையோரும், பெண்ணாசை

* எச. வேதத்திற்குப் புறம்பானவர்.

பிடித்தோரும், துராசாரர்களும், செய்ந்நன்றிமறந்தோரும், *எ௬. கொக்குச்செய்கையுடையோரும். (௧எஎ).

कर्मभ्रष्टाः क्षमा नष्टा निंद्यतर्कैश्च वादिनः ।
कामिनः क्रोधिनश्चैव हिंसाश्चंडाः शठास्तथा ॥ १७८ ॥

கர்மத்தினின்று நழுவினவர்களும், க்ஷமையொழிந்தோரும், நிந்திக்கப்படு தர்க்கங்களால் வாதிப்பவரும், காமிகளும், கோபிகளும், கொலைத்தொழிலுடையவரும், *எசு. சண்டர்களும், அங்ஙனமே *எஎ. சடர்களும்()

ज्ञानलुप्ता न कर्तव्या महापापास्तथा प्रिये ।
एभ्यो भिन्नो गुरुः सेव्य एक भक्त्या विचार्य च ॥ १७९ ॥

பிரியமானவளே! ஞானமின்றியவர்களும், மகாபாபிகளுமாகிய இவர்களைக் குரவர்களாகக் கொள்ளலாகாது.

---

*எ௬. கொக்கு அசைவற்றிருந்து தக்க மீன் சமீபித்தவுடன் ஒரே கொத்தாய்க் கொத்துவதுபோல், விஷயம் அகப்படும்வரையில் தியானஞ்செய்யும் வைராக்கியமுடையானைப்போல் வெளியில் காட்டி உள்ளில் விஷயத்தியானிகளாய் விஷயம் வாய்த்தவுடனே தாவும் செய்கையுடையார்.

*எசு குரூரமானவர்.

*எஎ. புறங்கூறுவோர்.

இவர்களுக்கு வேருய குரவனே விசாரித்து * ஏஅ. வக பத்தியினுல் சேவிக்கத்தக்கவனுவன். (கஎகூ)

शिष्यादन्यत्र देवेशि न वदेद्यस्य कस्यचित् ।
नराणां च फलप्राप्तौ भक्तिरेव हि कारणम् ॥ १८० ॥

தெய்வநாயகி! சிஷ்யனுக் கந்நியமான எவனுக்கும் சொல்லலாகாது. நரர்கள் பயனை யடைவதற்குப் பத்தியே காரணம். (கஅ0)

गूढो दृढश्च प्रीतश्च मौनेन सुसमाहितः ।
सकृत्कामगतो वापि पंचधा गुरुरीरितः ॥ १८१ ॥

கூடமானவனும், திடமானவனும், பிரியப்படுவோனும், மௌனத்தாற் செவ்வையாய்ச் சமாதியடைந்தோனும், எப்போதாயினும் ஒருமுறை கர்மத்தை யடைந்தோனுமாகிய இவன் ஐவகைக் குரவனெனப்படுவன். (கஅக)

सर्वं गुरुमुखाल्लब्धं सफलं पापनाशनम् ।
यद्यदात्महितं वस्तु तत्तद्द्रव्यं न वंचयेत् ॥ १८२ ॥

குருமுகமாக அடையப்பட்ட யாவும் பயனுள்ளனவும் பாவத்தை யொழிப்பனவுமாம். யாது யாது தனக்கு இத

---

* ஏஅ. ஏகபத்தி=பிரதானபக்தி.

மான (நன்மையான) வஸ்துவோ அந்தந்தத் திரவியத்தை வஞ்சிக்கலாகாது. (கஅ௨).

गुरुदेवार्पणं वस्तु तेन तुष्टोस्मि सुव्रते ।
श्रीगुरोः पादुकां मुद्रां मूलमंत्रं च गोपयेत् ॥ १८३ ॥

நல்விரதமுடையவளே! குருதேவார்ப்பணமாகிய வஸ்து எதுவோ, அதனல் யான் திருப்தியுள்ளவனாகின்றேன். ஸ்ரீகுருவின் பாதுகையாகிய முத்திரையையும் மூலமந்திரத்தையும் இரகசியமாய் வைக்கவேண்டும். (கஅ௩)

नतास्मि ते नाथ पदारविंदं बुद्धींद्रियप्राणमनोवचोभिः ।
यच्चिंत्यते भावित आत्मयुक्तौ मुमुक्षुभिः कर्ममयोपशांतये ॥

நாதனே! முமுக்ஷுக்களால் பாவிக்கப்படும் ஆத்மயுக்தியில் கர்மசொரூபத்தின் உபசாந்தியின்பொருட்டு எது சிந்திக்கப்படுகின்றதோ, அத்தன்மைய தமது பாதாரவிந்தத்தினைப் புத்தீந்திரியப்பிராணமனேவாக்குகளால் நமஸ்கரிப்பவளாயிருக்கின்றேன். (கஅ௪)

अनेन यद्भवेत्कार्यं तद्वदामि तव प्रिये ।
लोकोपकारकं देवि लौकिकं तु विवर्जयेत् ॥ १८५ ॥

பிரியமுள்ளவளே! இதனல் எந்தக்காரிய முண்டாகின்றதோ, அதனை யானுனக்குச் சொல்லுகிறேன். தேவி

இது உலகோபகாரமுள்ளதாம் இலௌகிகத்தை விட்டு விடல்வேண்டும். (கஅரு)

लौकिकाद्धर्मतो याति ज्ञानहीनो भवार्णवे ।
ज्ञानभावे च यत्सर्वं कर्म निष्कर्म शांयति ॥ १८६ ॥

இலௌகிகதர்மத்தினால் ஞானஹீனனாய்ப் *எக. பவார்ணவத்திற் சேருகின்றனன். ஞானத்தன்மையில் சகல கர்மங்களும் நிஷ்கர்மமா பொழிகின்றன. (கஅசு)

इमां तु भक्तिभावेन पठन्वै शृणुयादपि ।
लिखित्वा यत्प्रदानेन तत्सर्वं फलमश्नुते ॥ १८७ ॥

இதனைப் பக்தியாகப் படிப்பதனாலும், கேட்பதனாலும், எழுதிக் கொடுப்பதனாலும், அவ்வெல்லாப் பயனையு மடைகின்றான். (கஅஎ)

गुरुगीतामिमां देवि हृदि नित्यं विभावय ।
महाव्याधिगतैर्दुःखैः सर्वदा प्रजपन्मुदा ॥ १८८ ॥

தேவியே! இதயத்தில் தினமும் இக்குருகீதையைப் பாவிப்பாயாக. மகாவியாதிகளாலாகிய துக்கத்தோடும் இதனைச் சந்தோஷமாய் ஜபிக்கவேண்டும். (கஅஅ)

---

* எக. புபிறவிக்கடல்.

गुरुगीताक्षरैकैकं मंत्रराजमिदं प्रिये ।
अन्ये च विविधा मंत्राः कलां नार्हंति षोडशीम् ॥ १८९ ॥

இக்குருகீதையின் எழுத்தொவ்வொன்றும் முதன்மைபெற்ற மந்திரமாம். பிரியமுள்ளவளே! மற்ற நாநாவித மந்திரங்களெல்லாம் இதன் பதினாறில் ஒருபாகத்திற் கிணையாகா. (௧அ௯)

अनंतफलमाप्नोति गुरुगीताजपेन तु ।
सर्वपापहरा देवि सर्वदारिद्र्यनाशिनी ॥ १९० ॥

குருகீதையை ஜபித்தலால் அநந்த (அளவின்றிய) பயனை யடைகிறான். தேவி! அக்கீதை சகலபாபங்களையும் கெடுப்பதும், சகலதரித்திரங்களையும் நாசஞ்செய்வதுமாம்.

अकालमृत्युहरा चैव सर्वसंकटनाशिनी ।
यक्षराक्षसभूतादिचोरव्याघ्रविघातिनी ॥ १९१ ॥

அகாலமிருத்தியுவைக் கெடுப்பதும், சகலவருத்தங் களையு மொழிப்பதும், இயக்கர், அரக்கர், பூதங்கள், திருடர், புலிமுதலியவற்றைக் கொல்லுவதுமாம். (௧௯௧)

सर्वोपद्रवकुष्ठादिदुष्टदोषनिवारिणी ।
यत्फलं गुरुसान्निध्यात्तत्फलं पठनाद्भवेत् ॥ १९२ ॥

சகல உபத்திரவங்களும் குஷ்டமுதலியனவுமாகிய துஷ்டதோஷங்களைக் கெடுப்பதாயு மிருக்கின்றது. குரவன் சந்நிதியினால் எந்தப் பய னுண்டாகின்றதோ, அந்தப்பயன் படித்தலா லுண்டாகின்றது. (ககூ௨)

महाव्याधिहरा सर्वा विभूतेः सिद्धिदा भवेत् ।
अथवा मोहने वश्ये स्वयमेव जपेत्सदा ॥ १९३ ॥

இக்கீதை முழுவதும் மகாவியாதியைக் கெடுப்பதாம். (பரமேசுவர) விபூதியினது சித்தியைத் தருவ தாகின்றது. அல்லது * அ௦. மோகனத்திலும் வசியத்திலும் தானே எப்போதும் ஜபிக்க. (ககூ௩)

कुशदूर्वासने देवि ह्यासने शुभ्रकंबले ।
उपविश्य ततो देवि जपेदेकाग्रमानसः ॥ १९४ ॥

தேவி! குசம் (தர்ப்பை) அறுகு என்பவற்றாலாகிய ஆசனத்திலும், சுத்தமாகிய கம்பளாசனத்திலும் உட்கார்ந்து, தேவி! அதன்பின் ஏகாக்கிர மனதுடையவனாய் ஜபிக்கவேண்டும். (ககூ௪)

शुक्लं सर्वत्र वै प्रोक्तं वश्ये रक्तासनं प्रिये।
पद्मासने जपेन्नित्यं शांतिवश्यकरं परम् ॥ १९५ ॥

---

* அ௦. மோகனம்=மோகிக்கச் செய்தல்.

பிரியமுள்ளவளே! எல்லாக்காரியத்திலும் வெள்ளையாசனமும், வசியத்தில் சிவப்பாசனமும் சொல்லப்பட்டிருக்கின்றன. பதுமாசனத்தில் நித்தியமும் ஜபிக்கவேண்டும். அது சாந்திவசியங்களை யுண்டுபண்ணும் மேலான ஆசனமாம். (௧௯௫)

वस्त्रासने च दारिद्र्यं पाषाणे रोगसंभवः ।
मेदिन्यां दुःखमाप्नोति काष्ठे भवति निष्फलम् ॥ १९६ ॥

வஸ்திராசனத்தில் தாரித்திரியமும், பாஷாணத்தில் ரோகசம்பவமும், தரையில் துக்கமு முண்டாகும். கட்டையில் நிஷ்பல மாகின்றது. (௧௯௬)

कृष्णाजिने ज्ञानसिद्धिर्मोक्षश्रीर्व्याघ्रचर्मणि ।
कुशासने ज्ञानसिद்धिः सर्वसिद्धिस्तु कंबले ॥ १९७ ॥

கிருஷ்ணாஜினத்தில் (மான்றோலில்) ஞானசித்தியும், புலித்தோலில் மோக்ஷலக்ஷ்மியும், தர்ப்பாசனத்தில் ஞான சித்தியும், கம்பளத்தில் சர்வசித்தியு முண்டாம். (௧௯௭)

आग्नेयां कर्षणं चैव वायव्यां शत्रुनाशनम् ।
नैर्ऋत्यां दर्शनं चैव ईशान्यां ज्ञानमेव च ॥ १९८ ॥

* அக. ஆக்கினேயத்தில் வசியமும், * அஉ. வாயுவில் சத்துருநாசனமும், * அங. நிருதியில் தரிசனமும், * அச. ஈசானியத்தில் ஞானமுமே யுண்டாம். (க௯அ)

उदङ्मुखः शांतिजाप्ये वश्ये पूर्वमुखस्तथा ।
याम्येतु मारणं प्रोक्तं पश्चिमे च धनागमः ॥ १९९ ॥

சாந்தியின் பொருட்டு வடக்குமுகமும், அப்படியே வசியத்தின் பொருட்டுக் கிழக்குமுகமும், மாரணத்தின் பொருட்டுத் தெற்குமுகமும், பணவரவின் பொருட்டு மேற்குமுகமும் ஜபித்தற் குரியனவாம். (க௯௯)

मोहनं सर्वभूतानां बन्धमोक्षकरं परम् ।
देवराज्ञां प्रियकरं राजानं वशमानयेत् ॥ २०० ॥

இம்மந்திரம் சர்வபூதங்களையும் மோகிப்பதும், பந்த நீக்கத்தைத் தருவதும், தேவராஜர்களின் பிரியத்தைச் செய்வதுமாம். இராஜாக்களை வசமாக்குகின்றது. (௨00)

---

* அக. தென்கிழக்கு.
* அஉ. வடமேற்கு,
* அங. தென்மேற்கு.
* அச. வடகிழக்கு.

मुखस्तंभकरं चैव गुणानां च विवर्धनम् ।
दुष्कर्मनाशनं चैव तथा सत्कर्मसिद्धिदम् ॥ २०१ ॥

வாயைக் கட்டுவதாயும், குணங்களை விருத்திசெய்வதாயும், துஷ்கர்மங்களைக் கெடுப்பதாயும், அப்படியே சற்கருமசித்தியைத் தருவதாயு மிருக்கின்றது. (௨0க)

असिद्धं सादयेत्कार्यं नवग्रहभयापहम् ।
दुःस्वप्ननाशनं चैव सुस्वप्नफलदायकम् ॥ २०२ ॥

சித்தியாத காரியத்தைச் சாதிக்கின்றது. நவக்கிரக பயத்தைக் கெடுப்பதாயும், கெட்ட சொப்பனங்களை யொழிப்பதாயும், நல்ல சொப்பனபலனைத் தருவதாயு மிருக்கின்றது. (௨0௨)

सर्वशांतिकरन्नित्यं तथा वन्ध्यासुपुत्रदम् ।
अवैधव्यकरं स्त्रीणां सौभाग्यस्य विवर्द्धनम् ॥ २०३ ॥

நித்தியம் சகல சாந்திகளையும் செய்வதாயும், அப்படியே மலடிக்கு நற்புத்திரனைத் தருவதாயும், ஸ்திரீகளுக்கு சுமங்கிலித்தன்மையைத் தருவதாயும், சௌபாக்கியத்தை விருத்திசெய்வதாயு மிருக்கின்றது. (௨0௩)

आयुरारोग्यमैश्वर्यं पुत्रपौत्रप्रवर्धनम् ।
निष्कामजापी विधवा पठेन्मोक्षमवाप्नुयात् ॥ २०४ ॥

ஆயுள் ஆரோக்கியம் ஐசுவரியம் புத்திரபௌத்திரர்க ளென்பவற்றை விருத்தி செய்வதாயு மிருக்கின்றது. நிஷ் காமமாய் ஜபிக்கும் விதவை படித்தால் மோக்ஷமடை வாள். (௨0௪)

अवैधव्यं सकामा तु लभते चान्यजन्मनि ।
सर्वदुःखमयं विघ्नं नाशयेत्तापहारकम् ॥ २०५ ॥

அவள் காமமுள்ளவளாயின் மறுபிறப்பில் சுமங்கிலித் தன்மை யடைகின்றாள். துக்கம் பயம் விக்கினம் எல்லா வற்றையும் நாசஞ் செய்வதாயும், தாபங்களைக் கெடுப்ப தாயு மிருக்கின்றது. (௨0௫)

सर्वपापप्रशमनं धर्मकामार्थमोक्षदम् ।
यं यं चिंतयते कामं तं तं प्राप्नोति निश्चितम् ॥ २०६ ॥

சகலபாவங்களையும் ஒழிப்பதும், தர்மகாமார்த்த மோக்ஷங்களைத் தருவதுமாம், எந்தெந்தக் காமத்தைச் சிந்திக்கின்றானோ அத்தனை நிச்சயமாக அடைகின்றான். ()

काम्यानां कामधेनुर्वै कल्पिते कल्पपादपः ।
चिंतामाणिश्चिंतितस्य सर्वमंगलकारकम् ॥ २०७ ॥

* அரு. காமியங்களுக்குக் காமதேனுவாயும், கற்பிதங்களுக்குக் கற்பகத்தருவாயும், சிந்திப்பவற்றிற்குச் சிந்தாமணியாயும், சகல மங்களத்தையு முண்டுபண்ணுவதாயுமிருக்கின்றது. (உ0எ)

लिखित्वा पूजयेद्यस्तु मोक्षश्रियमवाप्नुयात् ।
गुरुभक्तिर्विशेषेण जायते हृदि सर्वदा ॥ २०८ ॥

எவன் இதனை எழுதிப் பூஜிக்கின்றானோ, அவன் மோக்ஷலக்ஷ்மியை யடைகிறான். அவன் உள்ளத்தில் எப்போதும் குருபக்தி விசேஷமாக வுண்டாகின்றது (உ0அ)

जपंति शाक्ताः सौराश्च गाणापत्याश्च वैष्णवाः ।
शैवाः पाशुपताः सर्वे सत्यं सत्यं न संशयः ॥ २०९ ॥

சாக்தர்களும், *அர். சௌரர்களும், காணபத்தியரும், வைஷ்ணவரும், சைவரும், பாசுபதருமாகிய எல்லோரும் இதனை ஜபிக்கின்றார்கள். சத்தியம்; சத்தியம்; சமுசயமில்லை. (உ0கூ)

ஸ்ரீ குருகீதை இரண்டாம் அத்தியாயம்.

முடிந்தது.

---

* அரு. விரும்பியவற்றிற்கு.
* அர். சூரியவுபாஸகர்.

உ

# ஸ்ரீ குருகீதை

## மூன்றும் அத்தியாயம்.

अथ काम्यजपस्थानं कथयामि वरानने ।
सागरांते सरित्तीरे तीर्थे हरिहरालये ॥ २१० ॥

இனிக் காமியமாய் ஜபிக்குமிடத்தைச் சொல்லுகின்றேன். பார்வதி! கடலோரத்திலும், நதிக்கரையிலும், தீர்த்தங்களிலும், விஷ்ணுசிவாலயங்களிலும், (உகo)

शक्तिदेवालये गोष्टे सर्वदेवालये शुभे ।
वटस्य धात्र्या मूले वा मठे वृन्दावने तथा ॥ २११ ॥

சக்திதேவாலயங்களிலும், மாட்டுக்கொட்டகையிலும், சுபமாகிய சர்வ தேவாலயங்களிலும், ஆலவிருக்ஷத்தின் அடியிலும், நெல்லிவிருக்ஷத்தின் கீழும், மடங்களிலும், பிருந்தாவனங்களிலும், (உகக)

पवित्रे निर्मले देशे नित्यानुष्ठानतोपि वा ।
निर्वेदनेन मौनेन जपमेतत् समारभेत् ॥ २१२ ॥

அப்படியே பவித்திரமும் நிர்மலமுமாகிய இடத்தில் நித்தியானுஷ்டானஞ் செய்பவனாய்த் தான்பமின்றி மௌனமாயிருந்து இந்த ஜபத்தினை ஆரம்பிக்கக்கடவன். (உகஉ)

जाप्येन जयमाप्नोति जपसिद्धिं फलं तथा ।
हीनं कर्म त्यजेत्सर्वं गर्हितस्थानमेवच ॥ २१३ ॥

ஜபித்தலால் ஜயத்தை யடைகின்றான். ஜபசித்தியையும் பயனையு மடைகின்றான். ஈனகர்மங்களும், நிந்திக்கத்தக்க ஸ்தானங்களுமாகிய எல்லாவற்றையுமே விடவேண்டும். ()

स्मशाने विल्वमूले वा वटमूलांतिके तथा ।
सिध्यंति कानके मूले चूतवृक्षस्य सन्निधौ ॥ २१४ ॥

ஸ்மசானத்திலும், வில்வவிருக்ஷத்தினடியிலும், ஆலவிருக்ஷத்தின் கீழும், அப்படியே *அள. ஜாபாலவிருக்ஷத்தின் கீழும், மாவிருக்ஷத்தினடியிலும் ஜபித்தலால் சித்தியை யடைகின்றான். (உகச)

पीतासनं मोहने तु ह्यसितं चाभिचारिके ।
ज्ञेयं शुक्लं च शांत्यर्थं वश्ये रक्तं प्रकीर्तितम् ॥ २१५ ॥

மோகனத்தில் மஞ்சள் ஆசனமும், ஜாலத்தில் கருமையான ஆசனமும், சாந்தியின் பொருட்டு வெண்மை

---

* அள. ஜாபாலம்=காட்டாமணக்கு அல்லது நேர்வாளம்.

யான ஆசனமும் அறியத்தக்கனவாம். வசியத்தில் இரக்தநிறமான ஆசனம் சொல்லப்படுகின்றது. (உகரு)

जपं हीनासनं कुर्वन् हीनकर्माफलप्रदम् ।
गुरुगीतां प्रयाणे वा संग्रामे रिपुसंकटे ॥ २१६ ॥

ஆசனமின்றிச் செய்வதனால் ஜபம் ஈனகர்ம முடையதாய்ப் பயனைத் தருவதாகாது. குருகீதையைப் பிரயாணத்திலாவது யுத்தகளத்திற் சத்துருவாற் சங்கடம் நேரிட்டகாலத்திலாவது (உகசா)

जपन् जयमवाप्नोति मरणे मुक्तिदायिका ।
सर्वकर्माणि सिद्ध्यंति गुरुपुत्रे न संशयः ॥ २१७ ॥

ஜபித்தலினால் ஜயத்தை யடைகின்றான். மரணத்தில் முத்தியைத் தருவதா யிருக்கின்றது. சர்வ கர்மங்களும் குருபுத்திரனையுள்ளவனுக்கே சித்திக்கும்; சமுசய மில்லை.()

गुरुमंत्रो मुखे यस्य तस्य सिध्यंति नान्यथा ।
दीक्षया सर्वकर्माणि सिध्यंति गुरुपुत्रके ॥ २१८ ॥

குருமந்திரம் எவன் முகத்தி லிருக்கின்றதோ அவனுக்கு யாவுஞ் சித்திக்கின்றன; வேறுவிதத்தாற் சித்திக்கிறதில்லை. குருபுத்திரனுக்குத் தீக்ஷையினால் சகல கர்மங்களும் சித்திக்கின்றன. (உகஅ)

भवमूलविनाशाय चाष्टपाशनिवृत्तये ।
गुरुगीतांभसि स्नानं तत्त्वज्ञः कुरुते सदा ॥ २१९ ॥

சம்ஸாரகாரணம் நாசமாதற்கும், அஷ்டபாசங்கள் ஒழிவதற்கும் குருகிதையாகிய ஜலத்தில் தத்துவஞானி எப்போதும் ஸ்நானஞ் செய்கின்றான். (௨௧௯)

स एव सद्गुरुः साक्षात् सदसद्ब्रह्मवित्तमः ।
तस्य स्थानानि सर्वाणि पवित्राणि न संशयः ॥ २२० ॥

சத்தசத்துக்களைப் பிரித்தறியும் பிரஹ்மஞானசிரேஷ்டராகிய அவரே சாக்ஷாத் சற்குரு அவரது ஸ்தானங்கள் யாவும் பவித்திரமானவைகளாம். சம்சய மில்லை. (௨௨०)

सर्वशुद्धः पवित्रोऽसौ स्वभावाद्यत्र तिष्ठति ।
तत्र देवगणाः सर्वे क्षेत्रपीठे चरंति च ॥ २२१ ॥

சுபாவமாக எங்கு அவர் உட்காருகின்றனரோ, அது சர்வசுத்தமும் பவித்திரமுமாம். அந்த க்ஷேத்திரபீடத்தில் சகல தேவகணங்களும் சரிக்கின்றார்கள். (௨௨௧)

आसनस्था: शयाना वा गच्छंतस्तिष्ठतोपि वा ।
अश्वारूढा गजारूढाः सुपुप्ता जाग्रतोपि वा ॥ २२२ ॥

शुचिर्भूता ज्ञानवंतो गुरुगीतां जपंति ये ।
तेषां दर्शनसंस्पर्शात् पुनर्जन्म न विद्यते ॥ २२३ ॥

ஆசனத்திலிருப்பவரும், சயனிப்பவரும், நடப்பவரும், நிற்பவரும், குதிரையிலேறியவரும், யானையிலேறியவரும், சுழுத்தரும், விழிப்புடையோரும், சுத்தமானவரும், ஞானமுடையோருமாய்க் குருகீதையினை எவர்கள் ஜபிக்கின்றார்களோ, அவர்களைத் தரிசித்தல் மாத்திரத்தால் மறுபிறப்புண்டாகிறதில்லை. (௨௨௨-௨௨௩)

समुद्रे वै यथा तोयं क्षीरे क्षीरं जले जलम् ।
भिन्ने कुंभे यथाकाशं तथात्मा परमात्मनि ॥ २२४ ॥

எப்படிச் சமுத்திரத்தில் ஜலமும், பாலிற் பாலும், ஜலத்தில் ஜலமும், பின்னமாகிய(உடைந்த) கும்ப(கட)த்தில் ஆகாயமும் அபேதமாமோ, அப்படியே பரமாத்மாவினிடத்தில் ஆத்மா அபேதமாம். (௨௨௪)

तथैव ज्ञानवान् जीवः परमात्मनि सर्वदा ।
ऐक्येन रमते ज्ञानी यत्र कुत्र दिवानिशम् ॥ २२५ ॥

ஞானமுடைய ஜீவன் பரமாத்மாவினிடத்து எப்போதும் அவ்வாறேயாகின்றான். ஞானி எவ்வவ்விடத்தும் இரவும் பகலும் ஐக்கியத்தினால் இரமிக்கின்றான். (௨௨௫)

एवं विधो महायुक्तो सर्वत्र वर्तते सदा ।
तस्मात्सर्वप्रकारेण गुरुभक्तिं समाचरेत् ॥ २२६ ॥

இத்தன்மைய மகா யோகமுடையோன் எங்கும் எப்போது மிருக்கின்றுன். ஆகலால் எல்லாவிதத்தாலும் குரு பக்தியைச் செவ்வையா யாசரிக்க வேண்டும். (உஉகூ)

गुरुसंतोषणादेव मुक्तो भवति पार्वति ।
अणिमादिषु भोक्तृत्वे कृपया देवि जायते ॥ २२७ ॥

பார்வதி! குரவனைச் சந்தோஷிப்பித்தலாலே முக்தனாகின்றுன். தேவி! அவரது கிருபையினுல் அணிமாதிகளில் * அஅ. போக்திருத்தன்மை யுண்டாகின்றது. ()

साम्येन रमते ज्ञानी दिवा वा यदि वा निशि ।
एवं विधो महामौनी त्रैलोक्यसमतां व्रजेत् ॥ २२८ ॥

இரவிலும் பகலிலும் ஞானி சமத்தன்மையோடு இரமிக்கின்றுன். இத்தன்மையனான மகாமௌனி மூவுலக சமத்தன்மையையு மடைகின்றுன். (உஉஅ)

अथ संसारिणः सर्वे गुरुगीता जपेन तु ।
सर्वान् कामांस्तु भुंजंति त्रिसत्यं मम भाषितम् ॥ २२९ ॥

---

* அஅ. புசிக்குந்தன்மை.

இனிச் சம்சாரிகள் யாவரும் குருகீதையை ஜபித்தலால் சகல காமங்களையும் புசிக்கின்றார்கள். முச்சத்தியம் என்றுச் சொல்லப்பட்டது. (உஉகூ)

सत्यं सत्यं पुनः सत्यं धर्मसांख्यं मयोदितम् ।
गुरुगीतासमं स्तोत्रं नास्ति तत्त्वं गुरोः परम् ॥ २३० ॥

சத்தியம், சத்தியம், மறுபடியும் சத்தியம் *அஎ. தர்மசாங்கிய மென்றுச் சொல்லப்பட்டது. குருகீதைக்குச் சமமான ஸ்தோத்திரமும், குருவிற்கு மேலான தத்துவமு மில்லை, (உ௩0)

गुरुर्देवो गुरुर्धर्मो गुरौ निष्ठा परंतपः ।
गुरोः परतरं नास्ति त्रिवारं कथयामि ते ॥ २३१ ॥

குருவே தெய்வம்; குருவே தர்மம். குருவினிடத்து நிஷ்டை மேலான தவம். குருவிற்கு மேலான தில்லை. இதனை மும்முறை உனக்குச் சொல்லுகிறேன்: (உ௩க)

धन्या माता पिता धन्यो गोत्रं धन्यं कुलोद्भवः ।
धन्या च वसुधा देवि यत्र स्याद्गुरुभक्तता ॥ २३२ ॥

குருபக்தியுடைமை எந்த விடத்தி லிருக்கின்றதோ,

---

* அ௧. தர்மசாங்கியம்=தர்மவிவேகம்.

அந்தப் பூமியும் தன்னியமாம். அவன் தாயும் * அஅ. தன்னியை; தந்தையும் தன்னிபன்; கோத்திரமும் தன்னிபம்; குலத்திற் றோன்றியவனும் தன்னியன். (உ௩உ)

आकल्पजन्मकोटीनां यज्ञव्रततपःक्रियाः ।
ताः सर्वाः सफला देवि गुरुसंतोषमात्रतः ॥ २३३ ॥

தேவி! குரவன் சந்தோஷமாத்திரத்தால் கற்பபரியந்தமான கோடிப்பிறப்புகளின் யாகம் விரதம் தவம் கிரியையென்னும் அவையாவும் பயனுள்ளன வாகின்றன. (உ௩௩)

शरीरमिंद्रियप्राणमर्थस्वजनवंधुता ।
मातृकुलं पितृकुलं गुरुरेव न संशयः ॥ २३४ ॥

ஆதலால் சரீரம், இந்திரியம், பிராணன், அர்த்தம், தம்மவர், பந்துக்கள், தாயின் குலம், தந்தையின் குலமென்பவை குரவனே சம்சயமில்லை. (உ௩௪)

मंदभाग्या ह्यशक्ताश्च ये जना नानुमन्वते ।
गुरुसेवासु विमुखाः पच्यंते नरकेऽशुचौ ॥ २३५ ॥

எவர்கள் மந்தபாக்கிய முடையோராய், அசக்தர்க

* அஅ. செல்வமுடையவள்.

ளாய், * அஅ. விமுகராய்க் குருசேவையைப் பின்பற்றிச் செல்லுவதில்லையோ அவர்கள் அசுசியான நரகத்தில் வேகின்றார்கள். (௨௩௫)

विद्या धनं बलं चैव तेपां भाग्यं निरर्थकम् ।
येपां गुरुकृपा नास्ति अधो गच्छंति पार्वति ॥ २३६ ॥

ब्रह्मा विष्णुश्च रुद्रश्च देवताश्च पितृकिन्नराः ।
सिद्धचारणयक्षाश्च अन्ये च मुनयो जनाः ॥ २३७ ॥

பார்வதி! எவர்களுக்குக் குரவன் கிருபை யில்லையோ, அத்தன்மைய பிரஹ்மா விஷ்ணு ருத்திரன் தேவர்கள் பிதுர்க்கள் கின்னரர் சித்தர் சாரணர் இயக்கர் முனிவர் ஏனைய ஜனங்கள் என்பவர்களது வித்தை தனம் வலிமை என்னும் பாக்கியம் பயனற்றதாம். அவர்கள் கீழ்ச் செல்லுகின்றார்கள். (௨௩௬-௨௩௭)

गुरुभावः परं तीर्थमन्यतीर्थं निरर्थकम् ।
सर्वतीर्थमयं देवि श्रीगुरोश्चरणांबुजम् ॥ २३८ ॥

* அக. குருபாவம் மேலான தீர்த்தமாம். மற்றைத்

---

* அஅ. விலகியபார்வை யுடையோராய்,

* அக. குருபக்தி.

தீர்த்தங்கள் பயனற்றனவாம். தேவி! ஸ்ரீ குருவின் சரணாரவிந்தம் சகல தீர்த்தவடிவமாம். (உ௩அ)

कन्याभोगरता मंदाः स्वकांतायाः पराङ्मुखाः ।
अतः परं मया देवि कथितन्न मम प्रिये ॥ २३९॥

ஸ்திரீபோகரதர்களாகிய மந்தர்கள் தமது ஸ்திரீயினிடத்துப் பராமுகமா யிருப்பர். ஆதலால் எனது பிரியமுள்ள தேவி! (இந்த) மேலான பொருள் (அவர்கள் பொருட்டு) என்னால் சொல்லப்பட்டதன்று. (உ௩௯)

इदं रहस्यमस्पष्टं वक्तव्यं च वरानने ।
सुगोप्यं च तवाग्रे तु ममात्मप्रीतये सति ॥ २४० ॥

இஃது இரகசியம்; வெளிப்படையின்றியது. பார்வதி! ஸதி! உன்னிடத்தில் எனது ஆத்மப்பிரியத்தின்பொருட்டுச் சொல்லத்தக்கதாம். இதனைச் செவ்வையாய் மறைத்து வைக்கவேண்டும். (உ௪௦)

स्वामिमुख्यगणेशाद्यान्वैष्णवादींश्च पार्वति ।
न वक्तव्यं महामाये पादस्पर्शं कुरुष्व मे ॥ २४१ ॥

கணேசன் முதலியோரை முக்கிய தெய்வமாக வுடைய காணபத்தியர் முதலியோருக்கும்; வைஷ்ணவர் முதலியோ

ருக்கும் பார்வதி! இதனைச் சொல்லலாகாது. மகாமாயையே! என் பாதத்தைத் தொடுவாயாக. (உ௪௧)

अभक्ते वंचके धूर्ते पाषंडे नास्तिकादिषु ।
मनसापि न वक्तव्या गुरुगीता कदाचन ॥ २४२ ॥

பக்தியில்லாதவரிடத்தும், வஞ்சகரிடத்தும், * ௯0. தூர்த்தரிடத்தும், பாஷண்டரிடத்தும், நாஸ்திகர்முதலியோரிடத்தும் குருகீதை ஒருநாளும் மனதினாலும் சொல்லத்தக்கதன்று. (உ௪உ)

गुरवो बहवः संति शिष्यवित्तापहारकाः ।
तमेकं दुर्लभं मन्ये शिष्यहृत्तापहारकम् ॥ २४३ ॥

சிஷ்யனது வித்தத்தை (பொருளை) யபகரிக்கும் குரவர் அநேகருளர். சிஷ்யனது இருதயதாபத்தைக் கெடுக்கும் அக்குரவர் ஒருவரையே பெறுதற்கரியவர் என்று மதிக்கின்றேன். (உ௪௩)

चातुर्यवान् विवेकी च अध्यात्मज्ञानवान् शुचिः ।
मानसं निर्मलं यस्य गुरुत्वं तस्य शोभते ॥ २४४ ॥

சாதுரியமுடையோனும், விவேகியாய், அத்தியாத்ம

---

* ௯0. தூர்த்தர்=துஷ்டர்.

ஞானமுடையோனாய், சுசியாய், எவனுடைய மனது நிர்மல மாயிருக்கின்றதோ, அவனுக்குக் குருத்துவம் சோபிக்கின் றது. (உ௪௪)

गुरवो निर्मलाः शांताः साधवो मितभाषणः ।
कामक्रोधविनिर्मुक्ताः सदाचारा जितेंद्रियाः ॥ २४५ ॥

நிர்மலராயும், சாந்தராயும், சாதுக்களாயும், மிதமா னவார்த்தையுடையோராயும், காமக்குரோதங்களினின்று விடுபட்டவராயும், நல்லொழுக்கமுடையோராயும், இந்தி ரியஜயமுடையோராயு முள்ளோர் குரவராவர். (உ௪௫)

कृताया गुरुभक्तेस्तु वेदशास्त्रानुसारतः ।
मुच्यते पातकाद्घोराद्गुरुभक्तो विशेषतः ॥ २४६ ॥

வேதசாஸ்திராநுசாரமாக விசேஷமாய்ச் செய்யப் பட்ட குருபக்தியினால், குருபக்தியுடையோன் கோரமான பாதகங்களினின்றும் விடுபடுகிறான். (உ௪௬)

दुःसंगं च परित्यज्य पापकर्म परित्यजेत् ।
चित्तचिन्हमिदं यस्य तस्य दीक्षा विधीयते ॥ २४७ ॥

துர்ச்சங்கத்தை விட்டுப் பாபகர்மத்தையும் விடல் வேண்டும். இந்தச் சித்தவடையாளம் எவனுக் கிருக்கின்ற தோ, அவனுக்குத் தீக்ஷையானது விதிக்கப்படுகின்றது. ()

चित्तत्यागनियुक्तश्च क्रोधगर्वविवर्जितः ।
द्वैतभावपरित्यागी तस्य दीक्षा विधीयते ॥ २४८ ॥

சித்தத்தைத் தியாகத்திற் செலுத்தியவனும், குரோதகர்வங்களைவிட்டவனும், த்வைதத்தன்மையை விட்டவனுமாகிய அவனுக்கே தீக்ஷை விதிக்கப்படுகின்றது. ()

एतल्लक्षणयुक्तत्वं सर्वभूतहिते रतम् ।
निर्मलं जीवितं यस्य तस्य दीक्षा विधीयते ॥ २४९ ॥

இத்தன்மைய விலக்ஷணத்தோடுகூடிய தன்மையும், சகல ஜீவர்களுக்கும் இதத்தைச் செய்தலும், நிர்மலமாக ஜீவித்தலும் எவனுக் கிருக்கின்றதோ, அவனுக்குத் தீக்ஷை விதிக்கப்படுகின்றது (உசகூ)

क्रियया चान्वितं पूर्वं दीक्षाजालं निरूपितम् ।
मंत्रदीक्षाभिधं सांगोपांगं सर्वं शिवोदितम् ॥ २५० ॥

கிரியையோடுகூடிய தீக்ஷைகள் முன்னமே நிரூபிக்கப்பட்டன. மந்திரதீக்ஷையென்பது முழுவதும் * கூக. சாங்கோபாங்கமாகச் சிவனால் முன் சொல்லப்பட்டது. (உரு0)

---

* கூக. சாங்கோபாங்கம் = அங்கங்களோடும் துணையங்கங்களோடும்.

क्रियया स्याद्विरहितां गुरुसायुज्यदायिनीम् ।
गुरुदीक्षां विना को वा गुरुत्वाचारपालकः ॥ २५१ ॥

கிரியையின்றியதும், குருசாயுச்சியத்தைத் தருவது மான குருதீக்ஷையின்றி எவன் குருத்தன்மையாசாரத்தைப் பாலிப்பவனுவன்? (உருக)

शक्तो न चापि शक्तो वा दैशिकांघ्रिसमाश्रयात् ।
तस्य जन्मास्ति सफलं भोगमोक्षफलप्रदम् ॥ २५२ ॥

சக்தனுயினும் அசக்தனுயினும் தேசிகனது பாதத்தைச் செவ்வையாய் ஆசிரயிப்பானுயின், அவன் பிறப்புப் பயனுளதாகின்றது. போகமோக்ஷபயனைத் தருவதாகின்றது. (உருஉ)

अत्यंतचित्तपक्कस्य श्रद्धाभक्तियुतस्य च ।
प्रवक्तव्यमिदं देवि ममात्मप्रीतये सदा ॥ २५३ ॥

தேவி! எனது ஆத்மப்பிரியத்தின்பொருட்டு அத்தியந்தசித்தபரிபாக முள்ளவனுக்கும், சிரத்தைபக்தியுடையோனுக்கும் எப்போதும் இதனைச் சொல்லவேண்டும்.

सच्चिदानंदरूपाय व्यापिने परमात्मने ।
नमः श्रीगुरुनाथाय प्रकाशानंदमूर्तये ॥ २५४ ॥

சச்சிதானந்தவடிவினரும், வியாபக முடையவரும், பரமாத்மாவும், பிரகாசானந்தவடிவினருமாகிய ஸ்ரீ குருநாதனுக்கு நமஸ்காரம். (உருச)

सत्यानन्दस्वरूपाय बोधैकसुखकारिणे ।
नमो वेदांतवेद्याय गुरवे बुद्धिसाक्षिणे ॥ २५५ ॥

சத்தியானந்தசொரூபரும், ஞானமுக்கியமான ஆநந்தத்தைச் செய்பவரும், வேதாந்தங்களா லறியப்படுபவரும், புத்திக்குச் சாக்ஷியுமாயுள்ள குருவிற்கு நமஸ்காரம் (உருரு)

नमस्ते नाथ भगवन् शिवाय गुरुरूपिणे ।
विद्यावतारसंसिध्यै स्वीकृतानेकविग्रह ॥ २५६ ॥

வித்தை * அவதாரணஞ் செவ்வையாய்ச் சித்தித்தற்பொருட்டுக் கொள்ளப்பட்ட அநேக விக்கிரகங்களையுடையவரே! நாதனே! பகவானே! சிவமும் குருவடிவமுமாகிய உமக்கு நமஸ்காரம். (உருசா)

नवाय नवरूपाय परमार्थैकरूपिणे ।
सर्वाज्ञानतमोभेदभानवे चिद्घनाय ते ॥ २५७ ॥

நவமும் (புதிதும்), * நவவடிவமும், பரமார்த்தமுக்

---

* அவதாரணம் = கொள்ளுதல்.

* ஒன்பதுவடிவம். அவை பிரஹ்மா, விஷ்ணு, ருத்திரன், மகேசுவரன், சதாசிவன், நாதம், விந்து, சத்தி, சிவம் என்பன,

கிய வடிவமும், சகல அஞ்ஞானதமத்தை (இருளை)யும் பே திக்கும் சூரியனும், *௩௬. சிற்கனமுமாகிய உமக்கு நமஸ்கா ரம். (உருள)

स्वतंत्राय दयाक्लृप्तविग्रहाय शिवात्मने ।
परतंत्राय भक्तानां भव्यानां भव्यरूपिणे ॥ २५८ ॥

சுவதந்திரமுடையவரும், தயையினலாகிய விக்கிரக முடையவரும், சிவவடிவமானவரும், பக்தர்களுக்குப் பர தந்திரமுள்ளவரும், * ௩௭. பவ்வியமானவர்களுக்குப் பவ் வியவடிவினரும், (உருஅ)

विवेकिनां विवेकाय विमर्शाय विमर्शिनाम् ।
प्रकाशिनां प्रकाशाय ज्ञानिनां ज्ञानरूपिणे ॥ २५९ ॥

पुरस्तात्पार्श्वयोः पृष्ठे नमस्कुर्यादुपर्यधः ।
सदा मच्चित्तरूपेण विधेहि भवदासनम् ॥ २६० ॥

விவேகிகளுக்கு விவேகமானவரும், ஆராய்ச்சியுள் ளோருக்கு ஆராய்ச்சியாயுள்ளவரும், பிரகாசமுள்ளவற்றிற் குப் பிரகாசமாயுள்ளவரும், ஞானிகளுக்கு ஞானவடிவா யுள்ளவருமாகிய அவருக்கு முன்னும் பக்கங்களிலும் பின்

---

* ௩௬ ஞானநெருக்கம்.

* ௩௭. பவ்வியம்=உண்மை.

னும் மேலும் கீழும் நமஸ்காரஞ்செய்தல் வேண்டும். எப்போதும் எனது சித்தவடிவமாகத் தமதாசனத்தை விதிப்பீராக. (௨௫௯-௨௬௦)

श्रीगुरुं परमानन्दं वन्दे आनन्दविग्रहम् ।
यस्य सांनिधिमात्रेण चिदानन्दाय ते नमः ॥ २६१ ॥

பரமாநந்தரும் ஆநந்தவிக்கிரகருமாகிய ஸ்ரீகுருவை நமஸ்கரிக்கின்றேன். எவருடைய சந்நிதிமாத்திரத்தால் சிதாநந்த முண்டாகின்றதோ அத்தன்மைய உமக்கு நமஸ்காரம். (௨௬௧)

नमोस्तु गुरवे तुभ्यं सहजानन्दरूपिणे ।
यस्य वागमृतं हंति विषं संसारसंज्ञकम् ॥ २६२ ॥

எவருடைய வாக்காகிய அமிர்தமானது சம்ஸாரமென்னும் விஷத்தைக் கொல்லுகின்றதோ, அத்தன்மைய சகஜாநந்தவடிவ குருவாகிய உமக்கு நமஸ்காரம். (௨௬௨)

नानायुक्तोपदेशेन तारिता शिष्यसंततिः ।
तत्कृपासारवेदेन गुरुचित्पदमच्युतम् ॥ २६३ ॥

பல பொருத்தமான உபதேசத்தால் சிஷ்யசந்ததி இரக்ஷிக்கப்படுகின்றது. அவரது கிருபையின் சாரமான ஞானத்தால் அச்சுதமான குருவின் சித்பதம் பெறப்படுகின்றது. ()

अच्युताय नमस्तस्मै गुरवे परमात्मने ।
स्वारागोक्तपदेच्छूनां दत्तं येनाच्युतं पदम् ॥ २६४ ॥

தனது இரமிப்பிற்காகக் கூறப்படும் பதத்தை விரும்பு வோர்க்கு அச்சுதமான பதம் எவரால் தரப்பட்டதோ, அத் தன்மையை அச்சுதமும் பரமாத்மாவுமான குருவிற்கு நமஸ் காரம். (உகூச)

नमोऽच्युताय गुरवेऽज्ञानध्वांतैकभानवे ।
शिष्यसन्मार्गपटवे कृपापीयूषसिंधवे ॥ २६५ ॥

அஞ்ஞானமாகிய இருளுக்குச் சூரியனும், சிஷ்யனது சன்மார்க்கத்திற்குச் சமர்த்தரும், கிருபையாகிய அமுதத் திற்குச் சமுத்திரமும், அச்சுதமுமான குருவிற்கு நமஸ் காரம். (உகூரு)

ॐमच्युताय गुरवे शिष्यसंसारहेतवे ।
भक्तकार्यैकसिंहाय नमस्ते चित्सुखात्मने ॥ २६६ ॥

சிஷ்யனது சம்ஸாரத்திற்கு ஏதுவானவரும், பக்தர்க ளது காரியத்திற்கு முக்கிய சிங்கமும், சிற்சுகவடிவமும், அச்சுதருமாயிருக்கின்ற பிரணவவடிவ குருவாகிய உமக்கு நமஸ்காரம். (உகூசா)

गुरुनामसमं दैवं न पिता न च बांधवाः ।
गुरुनामसमस्स्वामी नेदृशं परमं पदम् ॥ २६७ ॥

குருநாமத்திற்குச் சமமான தெய்வமுமில்லை; பிதாவுமில்லை; பந்துக்களுமில்லை. குருநாமத்திற்குச் சமமான சுவாமியுமில்லை, இத்தன்மையபரமபதமுமில்லை. (உ௬௭)

एकाक्षरप्रदातारं यो गुरुं नैव मन्यते ।
श्वानयोनिशतं गत्वा चांडालेष्वपि जायते ॥ २६८ ॥

ஏகாக்ஷரத்தைத் தருபவராகிய குருவை எவன் மதிக்கவில்லையோ, அவன் சுவானயோனிநூற்றை யடைந்து சண்டாளயோனிகளிலும் பிறக்கின்றான். (உ௬அ)

गुरुत्यागाद्भवेन्मृत्युर्मंत्रत्यागाद्दारिद्रता ।
गुरुमंत्रपरित्यागी रौरवं नरकं व्रजेत् ॥ २६९ ॥

குருவை விடுதலால் மரணமுண்டாகும். மந்திரத்தை விடுதலால் தரித்திரத்தன்மை யுண்டாம். குருமந்திரத்தை விட்டவன் இரௌரவநரகத்தை யடைகிறான். (உ௬௯)

शिवक्रोधाद्गुरुस्त्राता गुरुक्रोधाच्छिवो नहि ।
तस्मात् सर्वप्रयत्नेन गुरोराज्ञां न लंघयेत् ॥ २७० ॥

சிவன் கோபித்தால் குரவன் இரட்சிக்கின்றார். குரவன் கோபித்தால் சிவன் இரட்சிப்பதில்லை. ஆகலாற் சகலப்பிரயத்தினத்தினாலும் குரவனாணையைக் கைவிடலாகாது. ()

संसारसागरसमुद्धरणैकमंत्रं
ब्रह्मादिदेवमुनिपूजितसिद्धमंत्रं ।
दारिद्र्यदुःखभयरोगविनाशमंत्रं
वंदे महाभयहरं गुरुराजमंत्रम् ॥ २७१ ॥

சம்ஸாரசமுத்திரத்தைக் கடப்பிக்கும் முக்கிய மந்திரமும், பிரஹ்மாதி தேர்களாலும் முனிவராலும் பூஜிக்கப்பட்ட சித்தமந்திரமும், * கூ௯. தாரித்திரியதுக்கத்தையும் பவரோகத்தையும் கெடுக்கும் மந்திரமுமாகிய மகாபயத்தைக்கெடுக்கும் குருராஜமந்திரத்தை நமஸ்கரிக்கின்றேன்.

सप्तकोटिमहामंत्राश्चित्तविभ्रंशकारकाः ।
एक एव महामंत्रो गुरुरित्यक्षरद्वयम् ॥ २७२ ॥

ஏழுகோடி மகாமந்திரங்களும் சித்தமயக்கத்திற்குக் காரணமானவை. குருவென்னுமிரண்டெழுத்துள்ள மந்திரமொன்றேமேலானதாம். (உஎஉ)

---

* கூ௯. வறுமைத்துயர்.

यस्य प्रसादादहमेव सर्वं मय्येव सर्वं परिकल्पितं च ।
इत्थं विजानामि सदात्मरूपं तस्यांघ्रिपद्मं प्रणतोस्मि नित्यम् ॥

எவரது பிரசாதத்தினால் யானே எல்லாம், என்னிடத்திற்றானே யாவும் கற்பிக்கப்பட்டிருக்கின்றன என்றிவ்வாறு சத்தாகிய ஆத்மவடிவத்தை யறிகின்றேனோ, அவரது பாததாமரையைத் தினமும் பணிகின்றேன். (உஎங)

अज्ञानतिमिरांधस्य विषयाक्रांतचेतसः ।
ज्ञानप्रभाप्रदानेन प्रसादं कुरु मे प्रभो ॥ २७४ ॥

அஞ்ஞானமாகிய திமிரத்தால் குருடானவனும் விஷயத்தினு லிழுக்கப்பட்ட சித்தமுடையவனுமாகிய எனக்கு ஞானப்பிரபையைக் கொடுத்தலால் பிரசாதத்தைச் செய்வீராக. (உஎச)

மூன்றும் அத்தியாயம்,

முடிந்தது.

---

ஸ்காந்தபுராணம் உத்தரகண்டத்தில்

உமாமகேசவரசம்வாதமான

குருகீதை முடிந்தது.